


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

*Thursday, 31st August* 1961.

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, the Deputy Speaker (SRI B. BHAKTAVATSALU NAIDU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

DEPUTY SPEAKER: Question Nos. 1535, 1542 and 1570 have been postponed as the Hon. Minister concerned, is not here.

Short Notice Question No. 17 and Question Nos. 1571 and 1572 may be answered together.

*Conference of Chief Ministers* (1961)

* 17 *S.N.Q.*—SRI M. KALYANASUNDARAM: Will the Hon. the Chief Minister be pleased to place on the table of the House a statement containing the conclusions of the Chief Ministers' Conference held in New Delhi recently on the subject of National Integration and Official Language?

THE HON. SRI C. SUBRAMANIAM: A copy[a] of a statement issued by the meeting of Chief Ministers and Central Ministers held in New Delhi on 10, 11 and 12th August 1961 is placed on the table of the House. The statement embodies the policy decisions arrived at in the meeting.

* 1571 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) whether a decision has been taken at the recent Chief Ministers' Conference held at Delhi to take effective steps on parties or organizations whose aims are secession from the Indian Union; and

(*b*) if so, the details of the decision?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) & (*b*) The attention of the hon. Member is invited to the statement already placed on the table of the House, embodying the policy decisions arrived at the Chief Ministers' Conference.

* 1572 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Chief Minister be pleased to state the various decisions taken at the Chief Ministers' Conference held at Delhi, during the second week of August 1961.

THE HON. SRI C. SUBRAMANIAM: The attention of the hon. Member is drawn to the statement already placed on the table of the House, embodying the policy decisions taken at the recent Chief Ministers' Conference in New Delhi.

---

[a] Printed as Append : on pages 525-531 infra.

[31st August 1961

**Sri M. KALYANASUNDARAM :** முதல் அமைச்சர்கள் மகாநாட்டின் முடிவுகளை நமது அரசாங்கம் சரியாகப் பரிசீலித்ததா ? பிரதேச மொழிக்குக் கொடுக்கவேண்டிய முக்கியத்துவத்தைப்பற்றி நம்முடைய ராஜ்யத்தின் சார்பில் சர்வகட்சி கூட்டத்தின் முடிவுகளுக்கும் இதற்கும் முரண்பாடு இருக்கிறதா ? முரண்பாடு இருக்கிறதென்றால் என்ன என்ன என்று சொல்வார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இப்போதுதான் அந்த அறிக்கையின் நகல் கிடைத்திருக்கிறது. அது பரிசீலனையில் இருககிறது. பரிசீலனை முடிந்தபிறகுதான் முரண்பாடு இருக்கிறதா, இருந்தால் என்ன என்ன என்று நிச்சயமாகச் சொல்லமுடியும்.

**Sri M. KALYANASUNDARAM :** நமது ராஜ்யத்தில் நாம் செய்த முடிவு இங்குள்ள கல்லூரிகள் எல்லாவற்றிலும் பிரதேசமொழி போதனா மொழியாக மாறவேண்டும், அதற்குரிய நடவடிக்கை எடுக்கவேண்டுமென்பது. ஆனால் இந்தச் சிபார்சுகளில் அதற்கு மாறாக ஆங்கிலத்தை நீடிக்கவேண்டுமென்று மறைமுகமாகச் சொல்லப்படுகிறது. அந்த மகாநாட்டில் நமது முதல் அமைச்சர் அவர்கள் கலந்துகொண்டார்களா ? அப்படியானால் இவர்கள் சொன்ன யோசனை என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** இதைப்பற்றி தனியாக ஒரு நாள் விவாதிக்கப் போகிறோம். அப்போது இந்த விவரம் எல்லாம் முழுவதும் பரிசீலிக்கப்படும். இரண்டாவது பகுதியைப் பார்த்தால் ஏறக்குறைய நாம் செய்த முடிவுக்கே அது ஒத்துவரக்கூடியதாக இருக்கிறது. நான் இன்னும் அதைப் பூராவும் பரிசீலித்துப் பார்க்கவில்லை. அதற்காக தனியாக ஒதுக்கியிருக்கும் நாளில் அதைப்பற்றி விவாதிக்கலாம்.

**Sri K. ANBAZHAGAN :** ராஜ்ய முதல் அமைச்சர்கள் மகாநாட்டிலே நாட்டின் ஒற்றுமையைக் காப்பாற்றவும், அதற்கு விரோதமாக உரிமை கேட்கிறவர்களை அடக்குவதற்காக தண்டனை அளிக்க சட்டம் இயற்றவேண்டுமென்ற கருத்தும் தெரிவிக்கப்பட்டதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** அங்கே என்ன நடந்தது என்பது இந்த அறிக்கையில் வைக்கப்பட்டிருக்கிறது. அதைப் படித்துத் தெரிந்துகொள்ளலாம். நான் இன்னும் படிக்காததனால் அதைப்பற்றி விவாதிக்க குறிக்கப்பட்டுள்ள நாளில் விவரமாகத் தெரிவிக்கிறேன்.

**Sri A. A. RASHEED :** May I know whether the decisions taken there are obligatory or they are only advisory in nature?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** Sir, I have already stated that I have not examined the full scope of the decisions arrived at and the opinions expressed there. Therefore, I am not in a position to express any views on this matter now.

DEPUTY SPEAKER : We shall pass on to the next question.

Sri K. Vinayakam and Sri N. K. Palanisami rose.

**Sri K. VINAYAKAM :** When a paper is placed on the table of the House, it is presumed that the Minister concerned with the Question will be seized of the matter. That being the case, we may be allowed to put some supplementaries instead of taking up the next question now.

DEPUTY SPEAKER : The hon. Members are aware that the Business Advisory Committee has agreed to the allotment of a day, viz., 25th September, for the discussion of this matter. So, all

31st August 1961]

the view-points may be put forward on that day, and there is no need to put any further supplementaries now, especially when the Hon. Minister wants time to study the various aspects. That was why I said that we could pass on to the next question.

SRI M. KALYANASUNDARAM: அடுத்த விவாதத்திற்குள்ளாகவாவது சர்க்கார் இந்த அறிக்கையைப் பரிசீலனை செய்து, இதில் நமது கருத்துக்களை யொட்டியவை எவை; முரண்பாடாக இருக்கக்கூடியவை எவை என்பதை தயாரித்து, சர்க்காருடைய கருத்து என்ன என்பதற்கு ஒரு அறிக்கை சமர்ப்பிப்பார்களா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: அறிக்கைக்கு மேலே அறிக்கை வேண்டுமா என்பது யோசிக்கவேண்டிய விஷயம்.

*Central Taxes (State's share)*

*1531 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய சர்க்கார் விதிக்கும் வரிகளில் மாநில சர்க்காருக்குத் தரவேண்டிய பங்கு கிடைக்கவில்லை என்பது உண்மையா ?

(இ) அப்படியானால், எந்தெந்த இனங்களில் எவ்வளவு பணம் குறைவு ?

THE HON. SRI C. SUBRAMANIAM: (அ) No.

(இ) Does not arise.

SRI S. M. ANNAMALAI: நமது நிதி அமைச்சர் அவர்கள் மேல் சபையில் பேசுகின்றபோது சொல்லியிருக்கிறார்கள். மத்திய சர்க்காரிடம் இருந்து நமக்கு வந்துசேரவேண்டிய பணம் சில ஐட்டங்களில் வந்துசேர வில்லை யென்று சொல்லியிருக்கிறார்களே, அதைக் குறித்து கனம் அமைச்சர் அவர்கள் விளக்கம் தரவேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இதிலே கேட்கப்பட்டிருப்பது— "whether it is a fact that the share of the Central taxes due to this State has not been received" என்பதுதான். வரவேண்டிய பங்கை அதிகரிக்கவேண்டும் என்றுதான் பைனான்ஸ் கமிஷனிடம் வற்புறுத்தி யிருக்கிறோம். நான் கொடுத்திருப்பதைப் படித்துவிட்டு கேள்வி கேட்டால் சௌகர்யமாக இருக்கும்.

SRI M. KALYANASUNDARAM: நிதிக் கமிஷன் முன்பு நமது சர்க்கார் ஏதாவது சிபார்சுகளைக் குறித்து சமர்ப்பித்திருக்கிறார்களா ? அப்படியானால் அங்கே கொடுக்கப்பட்டிருப்பதன் நகலை இந்தச் சபை முன்பு வைத்து விவாதிப்பதற்குச் சந்தர்ப்பம் தரப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இந்தச் சர்க்கார் தன் கருத்துக்களை பைனான்ஸ் கமிஷன் முன் வைத்திருக்கிறது. இந்தச் சபை முன்பு வைக்கலாம் என்று யோசித்ததற்கு அது கான்பிடென்சியல் ஆனதினால் அதை வைப்பது உசிதம் இல்லையென்றும் முடிவு செய்யப்பட்டது. ஆனால் அதையொட்டி கனம் அங்கத்தினர்கள் ஏதாவது நல்ல கருத்துக்களைக் கொடுத்து உதவினார்களென்றால் நான் நன்றி செலுத்துவேன்.

SRI M. KALYANASUNDARAM: அப்படியானால் சர்வ கட்சித் தலைவர்களுடைய கூட்டத்தையாவது கூட்டி முடிவு செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதைப்பற்றி ஆலோசித்து முடிவு செய்யப்படும்.

[31st August 1961

SRI K. ANBAZHAGAN : இதற்கு முன்னால் மாநில அரசாங்கத்தார் மத்திய அரசிடமிருந்து பெறவேண்டிய பங்குத் தொகையை இழந்துவிட்டதற்கு ஈடு கட்டக்கூடிய அளவில் வேறுவகையில் அந்தப் பங்கைத் தரவேண்டுமென்று மத்திய சர்க்காரை வற்புறுத்துவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வரவேண்டிய தொகையை இழந்துவிட்டதாகச் சொல்லமுடியாது. அந்தமாதிரி போனால் கேஸ் இல்லே. பல் வேறு காரணங்களால் இப்போது ஒதுக்கியிருக்கிற தொகையை அதிகரிக்கவேண்டுமென்று கேட்டிருக்கிறோம். அவ்வளவுதான.

*Conference of Municipal Commissioners (Ootacamund)*

*1532 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

உதகமண்டலத்தில் சமீபத்தில் கூடிய முனிசிபல் கமிஷனர்களின் மகாநாட்டில் என்ன முடிவுகள் எடுக்கப்பட்டன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : It was a departmental Conference and various subjects were discussed at the meetings. Resolutions as such were not passed at the Departmental Conference.

SRI M. KALYANASUNDARAM : Sir, both Question Nos. 1533 and 1534 may be taken up together.

DEPUTY SPEAKER : Yes, they may be taken up together.

*Tourists Centres*

*1533 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) the steps taken to develop Yercaud and Hogainakal in Salem district as Tourists Centres; and

(b) when the construction of Low Income Group Rest Houses at these places would be taken up?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Schemes for the construction of Low Income Group Rest Houses at Yercaud and Hogainakkal at an estimated cost of Rs. 2·50 lakhs and Rs. 1·50 lakhs respectively, have been included under the Tourist Development Plan of the Third Five-Year Plan.

(b) The Low Income Group Rest Houses will be taken up for execution during 1962–63 in Yercaud and 1963–64 in Hogainakkal.

*1534 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether there is any proposal to develop Grand Anicut and Upper Anicut on the Cauvery in Tiruchirappalli district as Tourists Centres; and

(b) whether Low Income Group Rest Houses will be constructed at these places?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) and (b) : The answer is in the negative.

31st August 1961]

SRI M. KALYANASUNDARAM : திருச்சி ஜில்லாவில் காவேரிக் கரையில் இருக்கும் கல்லணையும் அப்பர் அணைக்கட்டும் பிரயாணிகள் தங்குவதற்கு சிறந்த இடமாயிருக்கின்ற காரணத்தினால், இதை மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்க்காவிட்டாலும் ராஜ்ய சர்க்காராகிலும் இதற்கு நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த இடத்தில் எல்லாவித முன்னேற்றத்திற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன. இது தொடர்ந்து நடைபெறும். ''லோ இன்கம் குரூப் ரெஸ்ட் ஹவுசஸ்'' கட்டப்படவில்லை, மற்ற எல்லா முன்னேற்ற விஷயங்கள் கவனிக்கப்படும்.

SRI A. A. RASHEED : May I know whether any steps have been taken to provide catering at these Rest Houses?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, wherever it is necessary catering facilities have been made.

*Drinking Water-supply Schemes*

DEPUTY SPEAKER : As the hon. Member, who gave notice of Question No. 1536 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*1536 *Q.*—SRI A. R. MARIMUTHU : கனம் முதலமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ஸ்தல அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்படும் குடி தண்ணீர் திட்டங்களுக்கு பொதுமக்கள் 15 சத வீதம் கட்டவேண்டும் என்று சர்க்கார் உத்திரவிட்டுள்ளதா ?

(இ) பஞ்சாயத்துக்களின் நிதிநிலையை உத்தேசித்து இதைத் தளர்த்த அரசாங்கம் உத்திரவிடுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Yes Sir.

(இ) The matter is under consideration in the context of the entrustment of Community Development and Local Development Works Programmes to the Panchayat Union Councils, under section 66 of the Madras Panchayats Act, 1958.

*Drinking Water-Supply (Coimbatore Town)*

* 1537 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether any decision has been taken recently to augment drinking water-supply in Coimbatore town; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI : கேரள சர்க்கார் கோயம்புத்தூருக்கு போதுமான அளவிற்கு குடித் தண்ணீர் கொடுப்பதாகச் சொன்னார்களா ? அப்படியானால் சிறுவாணித் திட்டத்தை எடுத்துக் கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கேரள அரசாங்கத்துடன் பேசி முடிவிற்கு வரவேண்டியதாக இருப்பதால், இரு ராஜ்ய முதல் மந்திரிகளும் சந்தித்துப் பேச இருக்கிறார்கள்.

SRI M. KALYANASUNDARAM: கேரள அரசாங்கம் இந்தச் சிறுவாணி திட்டத்திற்கு சம்மதம் தெரிவித்தால், இதை எடுத்துக்கொள்ள காலதாமதம் ஆகாமல் நிதி வசதி செய்துகொடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU: சம்மதம் என்று முடிவிற்கு வந்தால், நிதிப்பற்றி கவலையில்லை, முடிவு ஏற்பட்டவுடன் வேண்டியது செய்யப்படும்.

SRI T. S. RAMASWAMI: May I know whether the attention of the Government has been drawn to the recent statement of the Hon. the Chief Minister of Kerala that so far as drinking water is concerned, they are always prepared to give it, particularly the Siruvani water.

THE HON. SRI M. A. MANICKAVELU: I am not in the habit of reading at random, statements made.

*Parambikulam waters (Tirupur Municipal Council Resolution)*

* 1538 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether the Government have received any resolution passed by the Tirupur Municipal Council in November 1960 to the effect that Parambikulam waters should be passed through the Noyal river; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI P. KAKKAN: (*a*) Yes, Sir.

(*b*) The Commissioner, Tiruppur Municipality, has already been informed that their requests will be taken up for consideration after realisation of the irrigation potential of the Parambikulam-Aliyar Project and watching the exact quantity of seepage available from the ayacut under the Parambikulam Main Canal.

SRI N. K. PALANISAMI: திருப்பூர்-நொய்யார் ஏரியிலிருந்து தண்ணீர் ஈரோட்டிலுள்ள வறண்ட பகுதிக்கும், கோபி தாலுக்காவில் உள்ள வறண்ட பகுதிக்கும் தண்ணீர் விடுவதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI P. KAKKAN: இதற்குத் தனிக் கேள்வி போட வேண்டும்.

*Government Officers (Rent)*

* 1539 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Works be pleased to state with reference to answer to the unstarred question No. 376 placed on the table of the House on 25th April 1960—

(*a*) the reasons for the increase of rent of the offices of the Director of Public Instruction, Director of Agriculture, Director of Medical Services, Conservator of Forests, Director of Animal Husbandry and Registrar of Co-operative Societies during the last year; and

(*b*) the steps taken by the Government to reduce the rents payable every year?

31st August 1961]

THE HON. SRI P. KAKKAN : (a) The attention of the Member is invited to the Paper [a] placed on the table of the House.

(b) A comparehensive scheme for the construction of a multistoried building at Chepauk for locating Government offices now housed in rented buildings is under the consideration of the Government.

SRI T. S. RAMASWAMI : May I know at what stage is that scheme at present?

THE HON. SRI P. KAKKAN : Now I think the estimates have been prepared.

SRI A. A. RASHEED : May I know whether the rent had increased after the decision of the Court?

THE HON. SRI P. KAKKAN : I have no such information. The hon. Member may put a separate question.

*Adulteration of cardamoms*

* 1540 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether it is a fact that rats' excreta are mixed with cardamoms; and

(b) if so, the steps taken to stop this adulteration?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) No report to this effect has been received so far.

(b) Necessary action will be taken under the Prevention of Food Adulteration Act, 1954 against the offenders if any specific cases come to the notice of the Government.

SRI A. A. RASHEED : Has the attention of the Government been drawn to a report published in the Press that cardamoms have been mixed with rats' excreta?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir. It is a reprehensible way of doing things.

*Technical University*

* 1541 *Q.*—SRI M. P. SARATHI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இந்த ராஜ்யத்தில் தொழில் நுணுக்கப் பல்கலைக் கழகம் (Technical University) நிறுவ திட்டமுண்டா ?

(இ) எங்கு, எப்போது நிறுவ திட்டமிடப்பட்டுள்ளது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) There is no proposal at present to start a technical University, Sir.

(இ) Does not arise.

[a] Printed as Appendix II on pages 531-532 infra.

[31st August 1961

*Pullambadi (Canal)*

* 1543 *Q*.—Sri T. K. SUBBIAH : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) புள்ளம்பாடி வாய்க்காலினால் எந்தெந்த கிராமங்களில் எவ்வளவு நிலங்கள் (கிராம வாரியாக) பயனடைகின்றன ?

(இ) இவ்வாய்க்காலில் எந்த காலங்களில் தண்ணீர் விடப்படும் ?

(உ) இந்த வாய்க்கால்களுக்காக நிரந்தரமான நீர்ப்பாசன பொறியாளர்கள், குமாஸ்தாக்கள், லஸ்கர்கள் எப்போது நியமிக்கப்படுவார்கள் ?

(எ) இதற்கான செலவு எவ்வளவு ?

(ஐ) இத்திட்டத்தினால் அதிகப்படி உணவு உற்பத்தி எவ்வளவு ?

The Hon. Sri P. KAKKAN : (அ)–(ஐ) The attention of the hon. Member is invited to the paper [a] placed on the table of the House.

Sri T. K. SUBBIAH : காவேரியிலிருந்து ஊற்று நீரையும், மழை நீரையும் ஜுன் மாதத்திலிருந்து புள்ளம்பாடி கனாலுக்குத் திருப்பிவிட அரசாங்கம் அனுமதிக்குமா ?

The Hon. Sri P. KAKKAN : காவேரியில் மிதமிஞ்சிய தண்ணீர் வந்தால்தான் புள்ளம்பாடிக்குத் திருப்பிவிடப்படும்.

Sri T. K. SUBBIAH : மேட்டூர் அணைக்கட்டில் தண்ணீர் நிரம்பி மூடிய பிறகு வீணாகப் போகும் காவேரித் தண்ணீரை திருப்பி அனுப்ப அரசாங்கம் அனுமதிக்குமா ?

The Hon. Sri P. KAKKAN : காவேரியில் மிதமிஞ்சிய தண்ணீர் இருந்தால் அப்பொழுது விடப்படும். காவேரியில் வெள்ளம் வந்தால், தண்ணீர் விடுவதற்கான திட்டம் தயாரிக்கப்பட்டு வருகிறது.

*Roads (Periakavanam-Poongulam)*

DEPUTY SPEAKER : As the hon. Member, who gave notice of Question No. 1544 is not is his seat, the question and answer will be printed in the proceedings.

* 1544 *Q*.—Sri V. SUBBIAH : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பொன்னேரி தாலுக்காவில் பெரியகாவணத்திலிருந்து பூங்குளத்திற்குச் சாலைபோடும் வேலை தற்போது எந்த நிலையிலிருக்கிறது ?

(இ) இச்சாலை போடுவதற்காக நிலங்களை ஆர்ஜிதம் செய்ததினால் பாதிக்கப்பட்ட குடியானவர்களிடமிருந்து அரசாங்கத்திற்கு முறையீடுகள் வந்திருக்கின்றனவா ?

(உ) அப்படியானால், அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

(எ) அவர்களுக்கு நஷ்டஈடு ஏதாவது கொடுக்கப்பட்டனவா ?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : (அ) The road was formed in the year 1957 and completed by 1958.

( ) No, Sir.

( உ ) and ( எ ) Do not arise.

---

[a] Printed as Appendix III on pages 532–533 infra.

31st August 1961]

*Travellers' Bungalows*

* 1545 *Q.*—SRI A. A. RASHEED (on behalf of SRI N. R. THIAGARAJAN): கனம் முதலமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ஒவ்வொரு மேஜர் பஞ்சாயத்து நகரங்களிலும் ஒரு பிரயாணிகள் விடுதி கட்ட திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Fishermen Co-operative Societies*

* 1546 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the total Government subsidy given to the fishermen or their co-operative societies in various districts and in what form they are given; and

(*b*) the percentage of the subsidy allotted to the Ramanathapuram district?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (*a*) and (*b*) : A statement [a] is placed on the table of the House.

SRI K. VINAYAKAM : May I know why only seven pablo boats are allotted to the Ramanathapuram district, whereas about 37 pablo boats have been allotted to the Kanyakumari district?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : From the Kanyakumari district more applications came and it is a fact that more fish is available at Kanyakumari. Not only that. Out of 37 pablo boats, I think six boats are from Tuticorin, that is Tirunelveli district and they are also working in the Kanyakumari district. As more favourable conditions prevail there, more boats have been given.

SRI K. VINAYAKAM : Were any requests made from the Fishermen Co-operative Societies in the Ramanathapuram district for the allotment of more pablo boats and if so, what action was taken on their requests?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Now I cannot say exactly how many applications have come from them but if they fulfil the conditions laid down and if the Government are able to give them, I am sure they will be considered.

*Documentary Film on History of Tamilnad*

* 1547 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தின் வரலாற்றினைக் குறித்து திரைப்படம் எடுக்கும் உத்தேசமுண்டா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) இல்லை.

(இ) எழவில்லை.

---

[a] Printed as Appendix IV on page 534–535 infra.

[31st August 1961

DEPUTY SPEAKER : Questions 1548 and 1549 may be taken up together.

*Municipal Engineer (Vellore)*

* 1548 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN and SRI M. P. SARATHI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகர சபையில் வேலைபார்க்கும் இன்ஜினியர் அவர்கள் எத்தனை வருட காலமாக வேலை பார்த்து வருகிறார் ?

(இ) சட்டப்படி எத்தனை வருடம் ஒருவர் ஒரு இடத்தில் வேலை பார்க்கலாம் ?

(உ) இவருக்கு மட்டிலும் விதிவிலக்கு என் ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) The Municipal Engineer has been at Vellore since 9th August 1956;

(இ) and (உ) Normally, an officer is not disturbed before the completion of a term of three years in one station. But on administrative grounds, it is open to the Government to transfer an officer within that period or to retain him beyond that period.

* 1549 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வேலூர் நகரசபையில் வேலைபார்க்கும் என்ஜினியர் அவர்கள் பேரில் 50 குற்றச்சாட்டுகளைக்கொண்ட ஒரு மனு ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களிடம் கொடுக்கப்பட்டதா ?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) Yes, Sir.

(இ) A report has been called for from the Chief Engineer, Public Works Department (General), Madras, on the several allegations contained in the petition. His report is awaited.

SRI V. K. KOTHANDARAMAN : பல குற்றச்சாட்டுகளுக்குக் காரணமாயிருக்கும் ஒரு என்ஜினியர் சுமார் ஐந்தாறு வருட காலமாக ஒரே இடத்தில் இருந்திருக்கிறார். ட்ரான்ஸ்பர் வரும்போதெல்லாம் அதைக் 'கான்ஸல்' செய்யக்கூடிய அளவுக்கு அமைச்சர் அவர்கள் தலையிடுவதன் காரணம் என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : பல குற்றச்சாட்டுகளுக்கு அவர் காரணம் என்று கூற முடியாது. பல குற்றச்சாட்டுகள் அவர் மீது கூறப்பட்டிருக்கின்றன. அவை இப்பொழுது பரிசீலனையில் இருக்கின்றன.

SRI P. U. SHANMUGAM : குற்றச்சாட்டுகளை விசாரிக்கும்போது அந்த உத்தியோகஸ்தரை அங்கே வைத்துக்கொண்டு விசாரிப்பது அவ்வளவு முறையல்ல என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? அவரை வேறு இடத்திற்கு மாற்றிவிட்டு அவர்மீதுள்ள குற்றச்சாட்டுகள் பற்றி விசாரிக்கப்படுமா ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அவர்கள் அங்கிருந்து மாற்றப்பட்டிருக்கிறார்.

SRI M. P. SARATHI : வேறு இடத்திற்கு மாற்றப்பட்டிருந்தாலும், இப்பொழுது மூன்றுமாத லீவில் வேலூரிலேயே இருந்துகொண்டு, இந்தப் புகார்களை இல்லாமல் செய்வதற்கான வேலையைச் செய்துகொண்டு வருகிறார்களே, அது அமைச்சருக்குத் தெரியுமா ?

31st August 1961]

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : லீவில் இருக்கும் போது அவர் என்ன செய்கிறார் என்பதற்கு அரசாங்கம் உத்தரவாதமாக இருக்க முடியாது ?

Sri V. K. KOTHANDARAMAN : இந்த இன்ஜினியர் அங்கிருக்கும் ஆளும் கட்சியைச்சேர்ந்த வசதி படைத்த ஒரு சிலருக்குச் சாதகமாக இருக்கிறார் என்கிற காரணத்திற்காக வேண்டி, இதுபோன்று அவருக்கு வந்த ட்ரான்ஸ்பர் ஆர்டர்களைக்கூட கான்சல் செய்வதற்கான முயற்சி செய்யப்பட்டது என்பது உண்மையா ? இனிமேலாவது தயவுசெய்து நேர்மையாக நடப்பதற்கு முயற்சி செய்யப்படுமா ?

The Hon. Srimathi LOURDHAMMAL SIMON : ஆளும் கட்சி —எதிர்க் கட்சி என்று வேற்றுமைப்படுத்திப் பேச கனம் அங்கத்தினர் இதைப் பயன்படுத்துகிறாரே தவிர, அதற்கு ஆதாரம் இல்லை.

The Hon. Sri C. SUBRAMANIAM : I object to the insinuation made. "இனிமேலாவது மனைவியை அடிக்காமல் இருப்பாரா ?" என்று கேட்பது போல், "இனிமேலாவது நேர்மையாக நடப்பதற்கு முயற்சி செய்யப்படுமா"? என்று கனம் அங்கத்தினர் கேட்கிறார். It looks as if we have not been straight-forward or just till now. I am sorry the hon. Member always indulges in such insinuations.

DEPUTY SPEAKER : The Engineer has been transferred. What is the use of putting supplementaries? We shall pass on to the next question.

*Minor Port for Athirampattinam*

DEPUTY SPEAKER : As the hon. Member who gave notice of Question No. 1550 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*1550 Q.—Sri A. R. MARIMUTHU : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லா அதிராம்பட்டிணத்தில் கடலில் படகுகள்மூலம் சாமான்கள் போக்குவரத்துக்காக சிறு துறைமுக வசதி செய்ய உத்தேசமுண்டா ?

The Hon. Sri P. KAKKAN : No, Sir.

*Secondary Education Bill*

* 1551 Q.—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state when the secondary Education Bill is likely to be introduced in the Assembly?

The Hon. Sri C. SUBRAMANIAM : The matter is under consideration and it is not possible to indicate the time of introduction.

Sri M. KALYANASUNDARAM : அக்டோபர் 2-ந் தேதி ஜில்லா போர்டுகள் மறைந்துவிடும். அதன் பிறகு ஜில்லா போர்டுகள் இருந்தாலும் பிரயோஜனம் இல்லை. இதுவரைக்கும் ஜில்லா போர்டு நிர்வாகத்தில் இருந்த உயர்நிலைப் பள்ளிகள், புதிய சட்டம் நிறைவேறுகிற வரையில், எப்படி நிர்வகிக்கப்படும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றின் விவரங்கள் வேண்டுமானால் கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போட்டால் சொல்ல முடியும்.

[31st August 1961

SRI N. K. PALANISAMI : செகண்டரி எடுகேஷன் கமிட்டியின் சிபார்சுகள் சர்க்காருக்கு வந்து இரண்டு வருஷங்கள் ஆகியும், அவற்றின் பேரில் சர்க்கார் நடவடிக்கை எடுக்காமலிருப்பதற்குக் காரணம் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இரண்டு வருஷம் ஆயிற்று என்று சொல்வது சரியல்ல. சமீபத்தில் தான் முடிவு எடுக்கப்பட்டது. அந்த முடிவுகளெல்லாம் நிர்வாக அடிப்படையில் எந்த அளவு சரியாக வரும் என்பது பற்றி இப்பொழுது பரிசீலனையில் இருக்கின்றன.

SRI M. KALYANASUNDARAM : கல்வி ஆலோசனைக் குழு ஒன்று இருக்கிறதே, அதன் கூட்டத்தையாவது சீக்கிரத்தில் நடத்தி, இதில் சிக்கல்கள் ஏதாவது இருந்தால் அவற்றை விடுவிப்பதற்கு நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆலோசனைக் குழுவைப் பொறுத்த வரையில், செகண்டரி எடுகேஷன் பில்லை என்ன விதத்தில் முடிவு செய்யலாம் என்று ஆலோசனை சொல்லியிருக்கிறார்கள். அதை நிர்வாக அடிப்படையில், நடைமுறையில் கொண்டுவரும்போது, ஏதாவது சிக்கல் இருக்குமா என்பது பற்றி பரிசீலனை நடக்கிறது. அந்தப் பரிசீலனை தீர்ந்தவுடனே முடிவு எடுக்க முடியும்.

SRI K. VINAYAKAM : What are the supposed defects of the present secondary education system which the proposed legislation seeks to rectify?

THE HON. SRI C. SUBRAMANIAM : The Bill will not deal with the education system as such. The administrative aspects and other things will be dealt with in the Bill.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : இன்னும் ஒரு மாதம் கூட இல்லாத காரணத்தால், எப்பொழுது முடிவு எடுக்கப்போகிறார்கள் என்று திட்டவட்டமாக அமைச்சர் அவர்கள் பதில் சொல்ல முடியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஜில்லா போர்டு போகும்போது உயர்நிலைப்பள்ளிகளை யார் எடுத்து மானேஜ் பண்ணுவது என்பது முடிவாகி விட்டது. அதுபற்றி தனியாக கேள்வி போட்டால் விவரம் சொல்ல முடியும். இப்பொழுது உடனடியாக என்னிடம் அந்த விவரம் இல்லை.

SRI M. KALYANASUNDARAM : அக்டோபர் 2-ந் தேதியிலிருந்து உயர்நிலைப் பள்ளிகளினுடைய நிர்வாகப் பொறுப்பு கலெக்டருடைய தனிப்பட்ட பொறுப்பில் விட்டுவைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது என்பது பற்றி தனிக் கேள்வி போட்டால் அதன் விவரங்கள் தரலாம்.

SRI M. KALYANASUNDARAM : பஞ்சாயத்து யூனியன்கள் ஏற்பட்டு விட்டன. இப்பொழுது அந்தப் பள்ளிகள் எப்படி நிர்வகிக்கப்படுகின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது டிஸ்ட்ரிக்ட் போர்டு இருக்கிறது. அது டிஸ்ட்ரிக்ட் கலெக்டர் பொறுப்பிலே இருக்கலாம், இன்னொருவர் பொறுப்பிலே இருக்கலாம். டிஸ்ட்ரிக்ட் போர்டு நிர்வாகத்தில் இருந்தவைகளை அக்டோபர் 2-ந் தேதியிலிருந்து தற்காலிகமாக வேறு எப்படி மானேஜ் பண்ணுவது என்பது பற்றி முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அதற்குத் தனிக் கேள்வி போட்டால் விவரம் கொடுக்கிறேன்.

31st August 1961]

*Tax on Marriages*

* 1552 *Q.*—Sri A. A. RASHEED: Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is any proposal to levy a tax on marriages as one of the measures of family planning?

The Hon. Sri M. A. MANICKAVELU: No, Sir.

Sri A. A. RASHEED: Is the Hon. Minister aware of the fact that increase in population is mainly due to early marriages? If so will the Government levy such a tax on early marriages?

The Hon. Sri M. A. MANICKAVELU: Government have no such proposal.

*Takkavi Loans*

* 1553 *Q.*—Sri K. R. VISWANATHAN (on behalf of Sri N. R. THIAGARAJAN): கனம் ரெவின்யூ அமைச்சர் தயவு செய்து கீழ்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, பெரியகுளம் தாலுக்கா ஓடைப்பட்டி விவசாயிகள் கிணறு ஆழப்படுத்த தக்காவி கடன் கேட்டு 1958-ம் ஆண்டு ஜூலை மாதம் 12-ம் தேதியில் ஜில்லா கலெக்டரிடம் கொடுத்த மனுவின்மீது எடுத்த நடவடிக்கை என்ன?

The Hon. Sri M. A. MANICKAVELU: No such application was received by the Collector.

*The Krishna-Godavari Waters*

* 1554 *Q.*—Sri S. M. ANNAMALAI: கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கிருஷ்ணா, கோதாவரி தண்ணீரின் உபயோகத்தைக் குறித்து ஆராய்வதற்கு மத்திய சர்க்காரால் குழு நியமிக்கப்பட்டிருப்பது சர்க்காரின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா?

(இ) அப்படியானால், நம் மாநிலத்தின் தேவையைக் குறித்து முறையிடும் உத்தேசம் உண்டா?

The Hon. Sri P. KAKKAN: (அ) Yes, Sir, through Press reports.

(இ) Yes, Sir. The Government propose to urge in the Southern Zonal Council which is already seized of the matter, that the Krishna-Godavari Commission should hear the representation of this State before finalising its recommendations.

Sri S. M. ANNAMALAI: செய்திக் குறிப்பிலிருந்து, மத்திய சர்க்கார் இது சம்பந்தமாக கமிஷன் நியமித்திருப்பதுபற்றித் தெரிவதாக அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். மத்திய சர்க்காரிடமிருந்து நமது அரசாங்கத்திற்குத் தகவல் ஏதாவது வந்திருக்கிறதா? அப்படித் தகவல் வராமலிருந்தால், ஸோனல் கவுன்ஸிலில் இதுபற்றி பரிசீலிப்பதற்குப் பதிலாக அந்தக் கமிஷனிடத்திலேயே பரிசீலிக்கும் உத்தேசம் இருக்கிறதா?

The Hon. Sri P. KAKKAN: நமக்கு எந்தவிதமான தகவலும் இதுவரை வரவில்லை. இருந்தாலும், ஸோனல் கவுன்ஸில் மூலமாக அந்தக் கமிஷனிடம் நம்முடைய பிரச்னையைச் சொல்லி முடிவு செய்ய வேண்டும் என்பது இந்த அரசாங்கத்தினுடைய எண்ணமாகும்.

[31st August 1961

SRI R. SRINIVASA IYER : கிருஷ்ணா நதியின் உபரித் தண்ணீரை சென்னைக்குக் கொண்டுவர வேண்டும் என்ற வகையில் ஒரு திட்டம் 1953-ம் வருஷத்தில் வகுக்கப்பட்டது. கிருஷ்ணா-கோதாவரித் தண்ணீரைப் பங்கிடும் வகையில் சென்ட்ரல் வாட்டர் பவர் கமிஷன் தனிக் கமிட்டி நியமித்திருக்கிறது. கிருஷ்ணா நதியின் உபரித் தண்ணீரைச் சென்னைக்குக் கொண்டுவந்து, அதன் மூலம் செங்கற்பட்டு ஜில்லாவில் 600,000 ஏக்கருக்குப் பாசன வசதியும், சென்னை நகருக்குக் குடி தண்ணீர் வசதியும் ஏற்படக்கூடிய வரையில் தென் மண்டலக் கவுன்சிலிலும், அந்தக் கமிட்டியினிடமும் நம்முடைய அரசாங்கம் 'ரெப்ரஸென்டேஷன்' செய்திருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : 1951-ம் வருஷத்திலிருந்தே இதுபற்றி இந்த சர்க்கார் முயற்சி செய்து கொண்டு வந்திருக்கிறது. இந்த ராஜ்யத்தின் பிரதிநிதிகளைச் சேர்த்துக் கமிட்டி அமைக்கப்படவில்லை. மத்திய சர்க்கார் அந்தக் கமிட்டி அமைத்திருக்கிறார்கள். ஆகையால்தான், ஸோனல் கவுன்ஸில் மூலமாக அந்தக் கமிட்டியாரிடம் சொல்லி, நமக்கு வேண்டியதை நாம் சாதித்துக் கொள்ளவேண்டியிருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : ஸோனல் கவுன்ஸிலில் இதுபற்றி முறையிடுவது ஒருபுறமிருக்க, ஆந்திர ராஜ்ய சர்க்காரிடத்தில் இது சம்பந்தமாக ஏதாவது நேரடியாகப் பேசப்பட்டதா?

THE HON. SRI P. KAKKAN : ஆந்திர ராஜ்ய முதல் மந்திரியுடன் ஸோனல் கவுன்சிலில் ஏற்கெனவே பேசப்பட்டது. அவர்கள் பரிசீலனை செய்து பின்னால் முடிவைத் தெரிவிப்பதாகச் சொன்னார்கள். அவர்களுடைய முடிவைத் தெரிவித்திருக்கிறார்கள். அதுபற்றி ஸோனல் கவுன்சில் பின்னால்தான் முடிவு செய்யும்.

SRI K. VINAYAKAM : மத்திய சர்க்கார் அமைத்திருக்கும் கமிஷனுக்கும், ஸோனல் கவுன்சிலுக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லாமல் இருக்கிறது. இரண்டு நதிகளின் தண்ணீர்ப் பங்கீடு பற்றி நிர்ணயிப்பதற்காக தனியாக அந்தக் கமிஷன் நியமிக்கப்பட்டிருப்பதால், நம்முடைய தேவையை நாம் ஸோனல் கவுன்சில் மூலமாகத் தெரிவிப்பதைவிட, நேரடியாக, **'as an entity by itself'** என்ற வகையில் அந்தக் குழுவுக்கு நம்முடைய கோரிக்கையைத் தெரிவிக்கலாம். நம் ராஜ்யத்தின் விவசாயத் தேவைக்குத் தண்ணீர் தர ஒரு வேளை அவர்கள் மறுத்தாலுங்கூட, சென்னை நகர மக்களின் குடி தண்ணீர்ப் பிரச்னையைத் தீர்க்கவாவது அவர்கள் தர முடியும் அல்லவா? இதற்கு 2,000 க்யூஸெக்ஸ் கிடைத்தால் போதும் என்று இன்ஜினியர்கள் சொல்கிறார்கள். சமுத்திரத்தில் வீணாக்கும் தண்ணீரைவிட நமக்குத் தேவைப்படும் தண்ணீர் மிகக் குறைவு. ஆகவே, கமிஷன் நியாயமாகப் பரிசீலித்தால் நமக்கு இதைத் தர அவர்கள் ஒத்துக் கொள்வார்கள். நம்முடைய அரசாங்கம் ஸோனல் கவுன்சில் மூலமாக அணுகுவதைவிட, நேரடியாக . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : May I make a submission, Sir, that the Government are aware of their responsibility with regard to getting water as much as possible from all the available sources and these are delicate matters which have got to be negotiated with the various other State Governments and it cannot be answered on the floor of the House even by way of questions or even by way of debate. It will be left to the good sense and capacity of the Government to deal with these matters.

### *Teaching of English*

* 1555 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பிரிட்டிஷ் கவுன்சில் மூலமாக இங்கிலாந்திலிருந்து புரபஸர்களை வரவழைத்து நமது ராஜ்யத்தில் உபாத்தியாயர்களுக்கு எப்படி ஆங்கிலம் போதிக்க வேண்டுமென்று கற்றுக்கொடுக்க எத்தனை சென்டர்கள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன ?

(இ) மேலும் எத்தனை செண்டர்கள் ஆரம்பிக்க உத்தேசம் ?

(உ) இதற்கான செலவுக்காக எவ்வளவு ஒதுக்கப்பட்டுள்ளது ?

(எ) மத்திய, ராஜ்ய சர்க்கார்களின் உதவி, வெளிநாட்டு உதவி உண்டா?

(ஐ) எப்போதிலிருந்து இதுபோல் ஆரம்பிக்கப்பட்டது?

(ஒ) என்ன நோக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்டது? விவரமாக மேஜை மேல் வைக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Four Centres—Pallavaram, Coimbatore, Tiruchirappalli and Virudhunagar.

(இ) One in Tirunelveli District.

(உ) About Rs. 43 lakhs.

(எ) No, Sir.

(ஐ) September 1959.

(ஒ) To improve the general standard of English teaching in schools in the State and in particular to train teachers in V Standard of Elementary Schools in the most up-to-date methods of teaching English.

SRI V. K. KOTHANDARAMAN: பல ஆண்டு காலமாக செகண்டரி கிரேட் உபாத்தியாயர்கள் ஆங்கிலம் எப்படி போதிக்க வேண்டுமென்பதற்கு நீண்ட பயிற்சி பெற்று வந்திருக்கிறார்கள். அப்பேர்ப்பட்டவர்களுக்கு இப்போது பயிற்சி அளிக்கக்கூடிய திறமை இல்லையென்பது நமது சர்க்காரின் நோக்கமா? அல்லது பிரிட்டிஷ் கவுன்சில் மூலமாக அவர்கள் கேட்டுக் கொண்டதற்கு இணங்கவேதான் இப்படி போதிக்க ஏற்பாடு செய்திருக்கிறார்களா? 9-00 a.m.

THE HON. SRI C. SUBRAMANIAM : பிரிட்டிஷ் கவுன்சிலை நாம் கேட்டுக் கொண்டோம். அவர்கள் ஒத்துக் கொண்டிருக்கிறார்கள். மறு பயிற்சிக்கு உதவ முன்வந்திருக்கிறார்கள். நாம் முன்னே கொடுத்திருக்கிற பயிற்சியில் ஆங்கிலம் போதாது. அந்த முறை சரியானது அல்ல என்பது நமது கருத்து. இப்போது ஆராய்ந்து அறிந்திருக்கிற முறைகளில் போதிக்க ஆசிரியர்களுக்குப் பயிற்சி கொடுக்க வேண்டுமென்பது கருத்து.

SRI K. R. NALLASIVAM : பிரிட்டிஷ் கவுன்சில் மூலமாக வருகின்ற பேராசிரியர்களுக்கு பிரிட்டிஷ் அரசாங்கமோ, பிரிட்டிஷ் கவுன்சிலோ சம்பளம் கொடுக்கிறதா? அல்லது நாம் செலவழித்துக் கொள்கிறோமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில ஆசிரியர்களுக்கு அவர்கள் கொடுத்து விடுகிறார்கள். இங்கே ஆகக்கூடிய செலவை நாம் ஒத்துக்கொள்கிறோம். ஒரு பிரிட்டிஷ் பேராசிரியருக்கு நாமே கொடுக்கிறோம்.

SRI V. K. KRISHNAMOORTHI : தற்போது ஆங்கிலத்தை ஐந்தாவது வகுப்பில் இருந்து ஆரம்பித்திருக்கிறார்கள். ஆல்பபெட்டில் இருந்து ஆரம்பித்து ஒரு லெசன் அளவுக்கு முதலிலேயே சொல்லிக் கொடுக்க வேண்டியிருப்பதால் முதலில் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தப் பயிற்சி ஆசிரியர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது.

SRI M. KALYANASUNDARAM : இங்கிலாந்திலிருந்து எத்தனை பேராசிரியர்கள் வரவழைக்கப்பட்டார்கள்? அவர்கள் மூலம் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறதா? ஆசிரியர்களுக்குப் போதிக்கிற ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆங்கிலப் பேராசிரியர்கள் மூன்று பேர் இருக்கிறார்கள். இவர்கள் நேரிடையாக ஆசிரியர்களுக்குப் பயிற்சி கொடுக்கிற ஆசிரியர்களுக்குப் போதிக்கிறார்கள்.

[31st August 1961

SRI K. VINAYAKAM : There could be no two opinions on the efficacy of the system that is adopted by the Government. I am aware of it. However, would the Government issue instructions to the Director of Public Instruction and the District Educational Officers concerned to select such of those teachers who actually handle English classes in the elementary schools instead of selecting at random whomsoever they like and who do not actually and exactly handle or teach the classes in English?

THE HON. SRI C. SUBRAMANIAM : There are no such teachers as teachers of English. As far as elementary teachers are concerned they have to deal with some two or three classes and some times two or three subjects also. All the Secondary Grade teachers teach English. Our programme is to give re-training to all Secondary Grade teachers numbering about 26,000 to 27,000. Secondly, in the training schools also the methods of teaching which are adopted will have to be changed. That process is also taking place. Once we give re-training to the existing teachers, the new incumbants getting training in future will be taught in the new method.

SRI A. A. RASHEED : Sir, in view of the big rush to these centres, will the Government consider to open some more such centres?

THE HON. SRI C. SUBRAMANIAM : The question is whether sufficient number of trained personnel of the standard required to teach the Secondary Grade teachers was available. We have to get teachers with great experience. Our view is that this training programme should be over within a period of two years. We are sorry we are lagging behind by a year. Perhaps, it will take one more year to complete the programme.

*Mechanical filters*

* 1556 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Corporation of Madras has applied for a grant and loan to install rapid mechanical filters; and

(*b*) if so, the action taken thereon?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) and (*b*) The Commissioner, Corporation of Madras, has submitted an application for a loan and it has been referred to the Chief Engineer, Public Works Department (General), for his remarks.

An application for a grant has not yet been received.

SRI A. A. RASHEED : Sir, is the Hon. Minister aware that only non-vegetarian water is supplied by the Corporation because the filtered water is being mixed with the non-filtered water?

31st August 1961]

DEPUTY SPEAKER : What is meant by ‘ non-vegetarian ’ water?

SRI A. A. RASHEED : Sir, the water containing fish and bacteria.

THE HON. SRI M. A. MANICKAVELU : The hon. Member can get fish without paying for it. Now the water is being filtered under old system by sand filters. Recently, a 10-million gallon capacity mechanical filter has been installed. There is a proposal to instal a 30-million gallon capacity mechanical filter. With regard to that investigation is going on. The Government have also already sanctioned the scheme to facilitate the Corporation to take up the work. Necessary money is also provided in the current budget. After enquiry and investigation, it will be taken up.

SRI N. K. PALANISAMI : Sir, may I know whether the Government have drawn up a plan to replace the existing filters by rapid mechanical filters so that the defective smell in the water could be removed?

THE HON. SRI M. A. MANICKAVELU : That is what I have been telling till now. There is one mechanical filter with a capacity of 10-million gallon. There is a proposal to instal another 30-million gallon mechanical filter.

SRI A. A. RASHEED : What is the amount of loan asked for?

THE HON. SRI M. A. MANICKAVELU : The work may cost Rs. 79 lakhs. Provision has been made in the current budget for Rs. 35 lakhs under the Head ‘ Loans ’ and Rs. 35 lakhs under the Head ‘ Grants ’.

SRI K. VINAYAKAM : Sir, is it not a fact that the water supplied through taps in the City of Madras is not non-vegetarian but it is due to the particles of fungus deposit found in the lower layers of water which are disturbed by the fishing rights allowed to the fishermen in the lake area at Poondi?

THE HON. SRI M. A. MANICKAVELU : I am sorry that the hon. Member is getting only vegetarian water.

### *Educational concessions*

*1557 *Q.*—SRI **T. S. RAMASWAMI (on behalf of Sri N. R. Thiagarajan)**: கனம் நிதி அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தியாகிகளின் குழந்தைகளுக்குக் கல்விச் சலுகை எந்தெந்த வகையில் கொடுக்கப்படுகிறது? மத்திய சர்க்கார் செய்யும் உதவி என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : Educational concessions by way of remission of full tution fees at all stages in all educational institutions for Collegiate and Technical education are granted to the children of political sufferers whose gross annual income from

all sources are with certain specified limits. In addition to this a scheme of scholarships has been instituted from last year for the benefit of children of political sufferers studying in high schools and non-professional colleges. The question of instituting a similar scheme of scholarships for such students taking up professional courses of studies is under consideration.

The Government of India meet one-half of the expenditure on the fee concessions and scholarships awarded in pursuance of the scheme formulated by them.

SRI K. R. NALLASIVAM : ஆரம்பப் பள்ளிகளில் இந்தத் தியாகிகள் சலுகை என்று பெருமல் விட்டுவிட்டு கல்லூரிக்கு வந்தவர்கள் இந்தச் சலுகை கேட்கிற காலத்தில் சில சிக்கல் இருப்பதாக சர்க்காரிடத்தில் தகவல் உண்டா? அப்படிச் சிக்கல் இருப்பதாகத் தெரிந்தால் அதை நீக்க வழியுண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சிக்கல் இருப்பதாக எடுத்துச் சொன்னால் அதை விடுவிக்க முயற்சி செய்யலாம்.

SRI T. S. RAMASWAMI : May I know, Sir, whether the attention of the Goovernment was drawn to the long delay in disbursing the various scholarships? In fact, I wrote personally a letter to the Hon. the Minister and even to the Secretary to the Government also. I have not received even a letter of acknowledgment. That is why I am putting this question.

THE HON. SRI C. SUBRAMANIAM : I am sorry, Sir, that the letter has not been acknowledged. Action is being taken. During this year there is no avoidable delay. I do agree that there was delay during the last year as the scheme was itself new and so there was some delay in the department.

SRI A. GOVINDASAMI : தியாகிகளுடைய குழந்தைகளுக்கு உபகாரச் சம்பளம் வழங்குவதிலே ஏதாவது விசேஷ சலுகை கொடுக்கப்படுகிறதா?

THE HON. SRI C. SUBRAMANIAM : அதுவே விசேஷ சலுகை தான்.

* 1558 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether school fee concession granted to the children of non-gazetted officers and teachers are allowed to children of non-gazetted officers who are re-employed, if any, after retirement?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI N. K. PALANISAMI : May I know whether the Government will grant the school fee concession to the children of N.G.Os. working in the various sanatoria also?

THE HON. SRI C. SUBRAMANIAM : This concession is given to the children of the N.G.Os. and 'N.G.Os.' means, 'Non-Gazetted Officers in Government service.'

31st August 1961]

**Sri A. GOVINDASAMI :** நான் விசேஷ சலுகை கொடுக்கப்படுகிறதா என்று கேட்டதற்கு அமைச்சர் அவர்கள் உபகாரச் சம்பளம் கொடுப்பதே விசேஷ சலுகைதான் என்றார்கள் . . . .

DEPUTY SPEAKER : We are now in question No. 1558. The hon. Member's supplementary relates to the previous question.

*Flood Relief Fund (November 1960 flood).*

*1559 *Q.*—**Sri S. M. ANNAMALAI.** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் பெய்த மழையில் சேதத்திற்காக நிவாரண நிதியாக இந்தியாவின் முதல் அமைச்சர் பணம் அனுப்பினாரா?

(இ) அப்படியாயின், எவ்வளவு பணம், யார்மூலம் விநியோகிக்கப் பட்டது.

**The Hon. Sri M. A. MANICKAVELU :** (அ) Yes. Donations totalling Rs. 25,000 were received from the Prime Minister's National Relief Fund.

(இ) The donations were pooled with the Madras Cyclone Relief Fund, 1955, from which a total sum of Rs. 80,935.87 was utilised through the Inspector-General of Police, Board of Revenue, Collector of Madras, and the Corporation of Madras.

**Sri S. M. ANNAMALAI :** மேயர் தலைமையில் நியமிக்கப்பட்ட கமிட்டி அந்தப் பணத்தைத் தரவேண்டும். நாங்களே வழங்குகிறோம் என்று கேட்டார்களா ? ஏன் அந்தக் கோரிக்கை நிராகரிக்கப்பட்டது ?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** சாதாரணமாக இந்த மாதிரி உதவியை சர்க்கார் மூலமாகத்தான் செய்கிறோம். அதிகப் பணம் சர்க்கார் தரப்பிலிருந்துதான் போகிறது. ஆகையால் ஏற்கெனவே செய்கிற ஏஜென்சிமூலமாகத்தான் இதையும் செய்யவேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது.

*Homoeopathic College (Financial Aid for Buildings)*

* 1560 *Q.*—**Sri N. K. PALANISAMI :** Will the Hon. the Minister for Revenue be pleased to state, whether there is any proposal to give financial aid for the construction of buildings for a Homoeopathic College in the City of Madras?

**The Hon. Sri M. A. MANICKAVELU :** No, Sir.

*Hajee Karutha Rowther College*

*1561 *Q.*—**Sri N. M. VELAPPAN** (on behalf of Sri N. R. THIAGARAJAN) : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா, உத்தமபாளையம் ஹாஜி கருத்த ராவுத்தர் கல்லூரிக்கு 1959-60-ல் சர்க்கார் செய்த உதவி என்ன ?

**The Hon. Sri C. SUBRAMANIAM :** A sum of Rs. 32,421 was sanctioned to the Hajee Karutha Rowther Howdia College, Uthamapalayam, during 1959-60 as teaching grant for the year 1958-59. No other grants were paid to the college that year.

[31st August 1961

*Scholarships (Depressed and Backward Classes)*

*1562 Q.—Sri S. M. ANNAMALAI: கனம் பொதுமராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கும், பிற்பட்ட வகுப்பினர்களுக்கும் வழங்கப்படும் உபகாரச் சம்பளத் திட்டம் செயல்படும் முறையைக்குறித்து மத்திய சர்க்கார் மாநில சர்க்காரை கேட்டுள்ளார்களா?

(இ) அப்படியானால், சர்க்கார் அனுப்பிய பதில் என்ன?

The Hon. Sri P. KAKKAN : (அ) and (இ) : In April this year, the Government of India enquired whether there was delay in the sanction and disbursement of Government of India scholarships in this State. The arrangements made for the expeditious disbursement of the Government of India scholarships were explained to them and they were informed that the delay has been reduced to the minimum during 1960-61.

Sri S. M. ANNAMALAI : சில சமயங்களிலே செத்தவர்களுக்குக்கூட உபகாரச் சம்பளம் கொடுப்பதாக சொல்லப்படுகிறதே, அப்படி என் தவறுகள் நடக்கின்றன? மத்திய சர்க்காரிடமிருந்து இம்மாதிரி குறைபாடுகளைத் தவிர்க்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறதா?

The Hon. Sri P. KAKKAN : மாணவர்கள் ஸ்காலர்ஷிப் வேண்டுமென்று விண்ணப்பம் செய்கிறார்கள். திடீரென்று அவர்கள் இறந்து விட்டால் இறந்ததைப்பற்றி தெரிவித்தால்தான் நாங்கள் அதை நிறுத்த முடியும். ஸ்காலர்ஷிப் போவதற்கு முன்பு அவர் இறந்தால் நாங்கள் என்ன செய்வோம்.

Sri P. G. MANICKAM : நமது மாகாண சர்க்கார் பெற்றோர்களுடைய வருமானம் ரூபாய் 1,200 இருக்கவேண்டுமென்று தெரிவித்திருக்கிறார்கள். இந்திய சர்க்காரோ 1,600 அல்லது 2,000 என்று குறிப்பிட்டிருப்பதாகத் தெரியவருகிறது. நமது மாநிலத்திலே பெற்றோர்களுடைய வருமானம் எந்த அளவுக்கு குறிப்பிடப்பட்டிருக்கிறதோ அதே அளவையே இந்திய சர்க்காரும் ஏற்றுக் கொள்ளும்படி நமது மாகாண சர்க்கார் சிபாரிசு செய்வார்களா?

The Hon. Sri P. KAKKAN : இப்பொழுது நமது நிதி அமைச்சர் அவர்கள் ஒரு ஆலோசனையை மத்திய சர்க்காரின் கல்வி மந்திரிக்கு எழுதி இருக்கிறார்கள். அதன்படி ரூபாய் 1,500-லிருந்து ரூபாய் 6,000-க்குள் உள்ள வருமானத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு நமது மாநிலத்திலே எந்தக் கண்டிஷன்படி கொடுக்கிறோமோ, அதன்படியே அவர்கள் ஒத்துக்கொண்டால் கொடுக்கிறோம் என்று எழுதியிருக்கிறார்கள். ஆனால் பதில் இன்னும் வரவில்லை.

Sri M. KALYANASUNDARAM : காலதாமதமாக போய்ச்சேருவது ஒருபுறமிருக்க, இந்த ஸ்காலர்ஷிப்புகள் வழங்குவதிலே பல ஒழுங்கீனங்கள் ஏற்படுகின்றன. ஆடிட் ரிப்போர்ட்டுகளும் வருஷா வருஷம் இந்த நிலைமையைப்பற்றி குறை கூறுகின்றனவே. பப்ளிக் அக்கவுண்ட்ஸ கமிட்டியிலும் சில சிபாரிசுகள் செய்திருக்கிறார்களே, அவற்றையெல்லாம் சர்க்கார் பரிசீலனை செய்தார்களா? மேற்கொண்டு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது?

The Hon. Sri P. KAKKAN : ரிப்போர்ட்டைப் பார்த்தபிறகு பரிசீலனை செய்வதற்காக சம்பந்தப்பட்ட செயலாளர் அவர்களையும் டைரெக்டர் அவர்களையும் கேட்டிருக்கிறேன்.

Sri R. SRINIVASA IYER : சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஸ்காலர்ஷிப்புக்கும் மாகாண கவர்ன்மெண்ட் ஸ்காலர்ஷிப்புக்கும் தொகையிலே வித்தியாசம் இருப்பதாகத் தெரிகிறது. ஒவ்வொரு மாணுக்கனும் மத்திய

[Sri M. A. Manickavelu] [31st August 1961

With these words, I request the House, Sir, to accept the motion.

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Occupants of Kudiyiruppu (Protection from Eviction) Bill, 1961 (L.A. Bill No. 27 of 1961) be taken into consideration."

SRI M. KALYANASUNDARAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை நான் முழு மனதோடு வரவேற்று ஆதரிக்கிறேன். இந்த மாதிரியான மசோதாக்களை நம்முடைய வருவாய் அமைச்சர் அவர்கள் கொண்டுவருவார்களானால் அவரை நான் ரொம்பவும் பாராட்டுவேன். இது கிராமப்புறங்களிலும் இன்னும் சில நகரங்களில் கூட குடியிருக்கக்கூடிய விவசாயத் தொழிலாளர்கள், குத்தகை விவசாயிகள் போன்றவர்களுக்கு ஒரு பெரிய பாதுகாப்பாக இருக்கும் என்பது என்னுடைய நம்பிக்கை. பல இனாம் கிராமங்களில் கிராமமே இனாம்தாருக்குச் சொந்தம் என்று குடியிருப்பு மனைகளிலிருந்துகூட அப்புறப்படுத்துகிறார்கள். ரயத்வாரி கிராமங்களிலும் விவசாயத் தொழிலாளர்களுக்கும், குறிப்பாக ஹரிஜன மக்களுக்கும் சொந்த மனை கிடையாது—பிறருக்குச் சொந்தமான மனையில் குடியிருந்துகொண்டிருக்கிறார்கள். இப்போது வரக்கூடிய நிலச்சீர்திருத்தம் காரணமாக இந்நிலை நிலப் பிரபுக்களுக்கு விவசாயத் தொழிலாளர்கள் மீது வெறுப்பும் ஆத்திரமும் ஏற்படுகிறது. அவர்களை அந்த இடத்தைவிட்டு விரட்ட வேண்டும் என்று அவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கவேண்டுமென்று பல நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. வீட்டைவிட்டு காலி செய்துவிட வேண்டுமென்று நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. இன்னும் மடங்

10-00 a.m. களுக்குச் சொந்தமான, கோவில்களுக்குச் சொந்தமான நிலத்தில் விவசாயத் தொழிலாளிகள் மேற்கூரை போட்டுக்கொண்டுகூட இருந்து வருகிறார்கள். அங்கும் இப்பொழுது தொந்தரவு ஏற்பட்டு வருகிறது. அவற்றிற்கெல்லாம் இந்த மசோதா பாதுகாப்பு அளிக்கும் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை.

ஆனால், இந்த மசோதாவில் சில ஷரத்துக்களில் கோளாறு இருக்கிறது. அவற்றை நிவர்த்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். கோர்ட்டுக்குப்போனால் நாம் கோரக்கூடிய பாதுகாப்பு விவசாயத் தொழிலாளிகளுக்குக் கிடைக்குமா என்று சந்தேகம் இருக்கிறது. குறிப்பாக 'விவசாயத் தொழிலாளி' என்பதை 'டிபைன்' செய்திருப்பதைப் பார்த்தால், அவர்கள் பெரும்பாலும் விவசாயத் தொழில் மூலம் வாழ்க்கை நடத்தவேண்டும் என்று வியாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. இதை நான் ஒரு பெரிய 'லைகூனா' என்று கருதுகிறேன். பெரும்பாலும், அதாவது 'பிரின்ஸிபில் மீன்ஸ் ஆப் லைவ்லிஹுட்' என்றால், அதில் சிக்கல் ஏற்படும். விவசாயத் தொழிலாளிகள் சில சமயங்களில் கிணறு வெட்டுவது, ரோடு போடுவது போன்ற வேறு கூலி வேலைக்கு போகக்கூடியவர்களும் இருப்பார்கள். அவர்கள் எந்த அளவுக்கு நிலத்திலே வேலை செய்யவேண்டும், எந்த அளவுக்கு இதர வேலைகளைச் செய்யலாம், செய்யக்கூடாது என்பதைப்பற்றியெல்லாம் கோர்ட்டிற்குக் கொண்டுபோய் சாட்சியங்கள் தயார் செய்வது என்றால், நமது நோக்கம் நிறைவேறவிடாமல் தடைசெய்யக்கூடிய ஒரு நிலைமை ஏற்படலாம். இந்த மசோதா யாருக்குச் சாதகமாக இருக்கவேண்டும் என்று பார்க்கவேண்டும். 3 வருஷங்களுக்குக் குடியிருப்பு மனையிலிருந்து விவசாயத் தொழிலாளிகளை அப்புறப்படுத்தக்கூடாது என்பதற்காகத்தான் இந்த மசோதா கொண்டுவரப்படுகிறது. நிலம் அவர்களுக்கே சொந்தமாகவேண்டும் என்று சொல்லவில்லை. அப்படியிருக்கும்பொழுது ஏதாவது 'லூப் ஹோல்' இருந்தால், அது விவசாயத் தொழிலாளிகளுக்குச் சாதகமாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நிச்சயமாக அவர்களுக்கு பாதுகாப்பு ஏற்பட முடியும். இல்லாவிட்டால், நிலப்பிரபுக்களுக்கு இருக்கக்கூடிய வசதி, வழக்கறிஞர்களுடைய உதவி, நீதிமன்றங்

31st August 1961] [Sri M. Kalyanasundaram]

களுடைய நிலை இவைகளைப் பார்க்கிறபொழுது பாதுகாப்பைவிட, தொந்தரவு அதிகமாகிவிடக் கூடாது. 'கல்டிவேடிங் டெனண்ட்ஸ் ப்ரொடக்ஷன் ஆக்ட்' கீழ் 3,000 வழக்குகள் நிலவெளியேற்றத்தில் முடிவடைந்திருக்கின்றன என்று அமைச்சர் அவர்கள் கூறினார்கள். கிட்டத்தட்ட 3 வருஷ காலத்தில் வழக்குகள் எண்ணிக்கையைத்தான் அவர்கள் சொன்னார்கள். ஒவ்வொரு வழக்கிலும் ஒன்றுக்கு மேற்பட்ட குடியானவர்கள் சம்பந்தப்பட்டிருப்பார்கள். குடியானவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். அமைச்சர் அவர்கள் அந்த எண்ணிக்கையைச் சொல்லவில்லை. சட்டத்தில் இருக்கக்கூடிய லூப்ஹோலைப் பயன்படுத்திக்கொண்டு, நீதிமன்றங்களுக்கு இழுத்துவைத்து, நீதிமன்றங்களில் வாதாடமுடியாத காரணத்தினால், நீதிமன்றங்களில் தங்களுடைய கட்சியைச் சரியானபடி எடுத்துச் சொல்லமுடியாத காரணத்தினால் அவர்கள் நிலத்தைவிட்டு வெளியேறி நிலத்தை இழக்க நேரிடுகிறது. நாம் எவ்வளவு திறமையாகச் சட்டத்தை தயார் செய்தாலும்கூட, நம் நாட்டில் இருக்கக்கூடிய நீதிமன்றங்கள் இரண்டு அர்த்தம் கொடுக்கமுடியாமல் சட்டம் எழுத முடியுமா என்று சந்தேகம் இருக்கிறது. 'அக்ரிகல்சரல் லேபரர்' என்பதற்கு டெபினிஷன்—

'agricultural labourer' means a person whose principal means of livelihood is the income he gets as wages for his manual labour on agricultural land.'

என்று எழுதப்பட்டிருக்கிறது. அதனால் பல சங்கடங்கள் ஏற்பட இடம் இருக்கிறது. 'வொர்கிங் ஜர்னலிஸ்டு ஆக்டில்' இம்மாதிரி 'டெபனிஷன்' 'பிரின்ஸிபல் மீன்ஸ் ஆப் லிவிங்' என்றிருந்ததால், பல வழக்குகள் உயர்நீதிமன்றங்களில் தோற்கடிக்கப்பட்டு, அவர்களுக்குப் பாதுகாப்பு கிடைக்காமல் போய் இருக்கிறது. இம்மாதிரி சிக்கல்களுக்கு இடம் அளிக்கும் என்ற காரணத்தினால்தான் இதைத் திருத்தவேண்டும் என்று நான் கூற விரும்புகிறேன்.

நான் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். அது ஓரளவுக்கு விவசாயிகளுக்கு சாதகமான முறையிலே இருக்கிறது என்று அமைச்சர் அவர்கள் கருதலாம். அப்படியிருந்தால்கூட, நான் எடுத்துக்காட்ட விரும்புவது என்னவென்றால், விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடுதான் இந்த மசோதா கொண்டுவரப்படுவதால், இந்தத் திருத்தத்தை அப்படியே ஏற்றுக்கொள்ளுவதுதான் சரியாக இருக்கும் என்று நினைக்கிறேன். மற்ற சில பிரிவுகளுக்கும் நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். அவைகளை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்வார்கள் என்று நினைக்கிறேன். அதேமாதிரி திருத்தம் அமைச்சர் அவர்கள் பெயராலும் இன்று சர்குலேட் ஆகியிருக்கிறது. எதிர்க்கட்சியினர் கொடுத்த திருத்தத்தை நாம் ஏற்றோம் என்ற நிலை ஏற்படக் கூடாது என்பதற்காகவோ என்னவோ அவர்கள் பெயராலும் திருத்தம் கொடுக்கப்பட்டிருக்கிறது. எப்படியிருந்தாலும் மசோதா திருத்தப்பட்டால் போதுமானது. அமைச்சர் அவர்களுடைய திருத்தத்தை ஏற்றுக் கொண்டாலும் சரி, என்னுடைய திருத்தத்தை ஏற்றுக்கொண்டாலும் சரி. மற்ற பிரிவுகளுக்கு நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தங்களை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். என்னுடைய திருத்தங்களுக்கு உட்பட்டு இந்த மசோதாவை ஆதரிக்கிறேன் என்று தெரிவித்துக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

*Sri R. SRINIVASA IYER : ஸார், இம்மாதிரி பாதுகாப்பு சட்டம் கொண்டுவரவேண்டியது அவசியம்தான். ஆனால், யாருக்கு பாதுகாப்பு, எந்த அளவில் பாதுகாப்பு, இதனால் இப்பொழுது இருக்கக்கூடிய பாத்யதா பாத்யங்கள் பாதிக்கப்படுமா என்பதையெல்லாம் கொஞ்சம் ஆலோசனை பண்ணிப் பார்க்கவேண்டும். பெரும்பாலும் விவசாயத்திலே வேலை செய்யக்கூடிய தொழிலாளர்களுக்கு, விவசாயத் தொழில் 'பிரின்ஸிபல் மீன்ஸ் ஆப் லைவ்லிஹூட்' ஆக இருக்கக்கூடிய தொழிலாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கக்கூடிய இந்த மசோதாவில் 'குடியிருப்பு' என்ற

வாசகத்திற்கு வியாக்யானம் கொடுத்திருப்பது சரியான முறையில் இல்லை. யார், யார் நிலத்தில் குடியிருக்கிறார்கள், எந்த சந்தர்ப்பத்தில் குடியிருக்கிறார்கள் என்பதைக் கொஞ்சம் ஆலோசனை பண்ண வேண்டும்.

மிராசுதார்கள் நிலங்களை விற்கிறார்கள் என்று அமைச்சர் அவர்கள் பேச்சிலே சொல்லப்பட்டது. அது வாஸ்தவம்தான். ஆனால், நஞ்சை நிலத்தை விற்றால், நாற்றங்காலைச் சேர்த்து விற்காவிட்டால் நஞ்சை நிலத்தை வாங்கமாட்டான். அதே மாதிரி ஒரு மிராசுதார் நஞ்சை என்று சொன்னால், பண்ணையாள் சாகுபடியாக இருந்தாலும் சரி, குத்தகை சாகுபடியாக இருந்தாலும் சரி, நிலத்தோடு ஒரு மனைக்கட்டு இருக்கும். பெரிய மிராசுதார்களாக இருந்தால் பல மனைக்கட்டுகள் இருக்கும். ஒரு வரிசையாக இருக்கும். தஞ்சாவூர் பழக்கம் என்று சொல்லி, அது தொன்றுதொட்டு வைத்திருக்கக்கூடியது என்று சொல்லி, அதுபற்றி ப்ரிவி கவுன்சில் 27 மதராஸ், ஸ்ரீ கே. எஸ். கிருஷ்ணசுவாமி அய்யங்கார் ஹைக்கோர்ட்டில் இருந்த காலத்தில் 1943 மதராஸ் தீர்ப்புகள் இருக்கின்றன. நிலத்தை விற்கிற காலத்தில் மனைக்கட்டுமட்டும் போகாது. மனைக்கட்டில் இருக்கிற ஆளும் அந்த புது மிராசுதாரிடம் வேலைக்குப் போய்விடுவான். அதேபோல் 'சோந்தை' என்று சொல்லுவது வழக்கம், கடன் கொடுப்பதற்கு. அதையும் புது மிராசுதார் கொடுத்து அந்த ஆளை எடுத்துக்கொள்ள வேண்டும். இதுதான் வெகு நாட்களாய் இருக்கிற பழக்கம். புது மிராசுதார் குடியானவனை விலக்காமல் இருக்கவேண்டுமென்பதற்குத்தான் இந்தப் பாதுகாப்புச் சட்டம்.

இன்னொரு விஷயம். காசாவர்க்கம் குடி என்பது ஒன்று. அதுபற்றி பெரிய விசாரணை பண்ணி 22 மதராஸ் லா ஜர்னலில் புல் பெஞ்ச் தீர்ப்பு இருக்கிறது. பைமாஷ் கணக்கில் இருக்கிறது. ஒரு மிராசுதார் நிலத்தை சாகுபடி செய்யும் ஆள் நிலத்தை சாகுபடி பண்ணாமல் அவனாகவே போய்விட்டால், அல்லது பண்ணையாள் பாதுகாப்பு சட்டப்படி மனுக்கொடுத்து விலக்கப்பட்டுவிட்டாலும் சரி; அப்புறம் இன்னொரு ஆளை வைப்பது என்றால் அவனுக்கு குடியிருப்பதற்கு ஒரு இடம் வேண்டும். அந்த நிலைமையை ஆலோசனை பண்ணவேண்டும். நிலம் மிராசுதாருக்கு சொந்தமாக இருக்கும். குடியானவன் வீடு மட்டும் கட்டிக்கொண்டிருப்பான். அந்த நிலைமையில் வீட்டைப் பிரித்துக்கொண்டு போவது என்பது கஷ்டம், அதுபற்றி பின்னால் சட்டம் கொண்டுவருகிறார்களோ என்னவோ? அம்மாதிரி 'டெனண்ட், லைசென்சி' என்று இருக்கக்கூடிய ஒரு முறையிலே இருக்கிறது. அது ஒரு தினுசான குடியிருப்பு.

இன்னொன்று, மிராசுதாரே வீட்டைக் கட்டிக் கொடுத்து அந்த வீட்டில் குடியிருப்பார்கள். பண்ணை வேலையும் செய்யலாம். குத்தகை சாகுபடியும் செய்யலாம். அது 'ட்வெல்லிங் ஹைட்டில்' வருமா? அம்மாதிரி மிராசுதார் கட்டிக்கொடுத்த வீட்டிலே குடியிருந்தால் அவர்களுக்கு என்ன பாதுகாப்பு? அது இதிலே வரவில்லை. ஒருக்கால் வீடு சட்டத்திலே வரும் என்று அவர்கள் நினைத்துக்கொண்டு இருக்கலாம்.

இன்னொரு விஷயம். விவசாயத்தில் வேலை செய்கிற 'லேபரர்' கூலி ஆளாக இருந்தாலும் சரி, அல்லது குத்தகைக்காரராக இருந்தாலும் சரி, அவர்கள் குடியிருக்கும் மனைக்கட்டிலிருந்து 3 வருஷங்களுக்கு அவர்களை அப்புறப்படுத்தாமல் இருப்பதற்கு பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்பதற்காகத்தான் இந்த மசோதா கொண்டுவரப்பட்டிருக்கிறது. இது நியாயமான ஒரு விஷயம்தான். இன்னொரு தினுசான குடிகளும் இருக்கிறார்கள். தென்னந்தோப்பு, மாந்தோப்பு, சவுக்கைத்தோப்பு, இதர தோப்புகள் ஆகியவைகளிலே காவலுக்காக ஒரு ஆள் வைத்திருக்கலாம். அவனுக்கு வீடு கட்டிக்கொடுத்து, மாடு வாங்கிக்கொடுத்தோ, மாடு வாங்கிக் கொடுக்காமலோ அவனை வைத்திருக்கலாம். அவன் வெளியிலேயும் போய் வேலை செய்யலாம். இங்கேயும் வேலை செய்யலாம். அப்படியிருக்கக்கூடிய நிலைமையில் அவன் தென்னந்தோப்பை சரியான முறையில் காவல் காக்கவில்லையென்றால், திருட்டுக்கு இடம்

31st August 1961] [Sri R. Srinivasa Iyer]

கொடுத்தான் என்று தெரியவந்தால், அந்த ஆளை மாற்றிவிட்டு வேறு ஆள் காவலுக்கு வைக்கவேண்டியிருக்கும் சில சந்தர்ப்பங்களில். அதற்கு வழிவகை செய்யவில்லை. ஆகவே நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன். ஸீலிங் பில்லில்கூட தோப்புகளை விலக்கி விட்டோம். காவலுக்காக மட்டும் வைத்திருக்கிற காரணத்தினால், தினசரித் தொல்லையாக ஆகிவிடும். ஆகவே, இதில் சர்ச்சைக்கு இடமில்லாமல் பாதுகாப்புக் கொடுக்கவேண்டும்.

இந்த சந்தர்ப்பத்திலே, கனம் கல்யாணசுந்தரம் இனாம்தார் பற்றியும் பேசினார்கள். அவையெல்லாம் பங்குகளாக இருப்பவை. ஒன்று 40 பங்கு என்றால், ஒரு பங்குக்கு இந்த மனைக்கட்டு என்று சொல்லவேண்டும். இல்லாவிட்டால் யாரும் நிலம் வாங்க மாட்டான். இந்த மனை 40 பங்கில் ஒரு பங்கு என்று தெளிவாக்க வேண்டும். அதைச் சேர்த்துத்தான் மனையும் சாசனம் செய்யப்படுகிறது. இந்த சட்டங்களுக்கெல்லாம் மிராசுதார்கள்தான் காரணம். தொழிலாளிகளை மிராசுதார்கள்தான் அப்புறப்படுத்தியிருக்கிறார்கள். ஆகவே, அவர்களுக்குப் பாதுகாப்பு அவசியம் கொடுத்தாக வேண்டியிருக்கிறது. இதற்கெல்லாம், கல்யாணசுந்தரம் சொன்னதுபோல் சட்டம் கொண்டுவந்தால், விவகாரம் கோர்ட்டுக்கே போகக்கூடாது என்றால், வழக்கறிஞர்களே கூடாது என்றால், எல்லாவற்றையும் ஒழித்து சர்க்காரே எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு, ஆளுக்கு ¼ ஏக்கர், ½ ஏக்கர் என்று கொடுத்து, சர்க்காரே சம்பளமும் கொடுத்து வைத்துவிடலாம். அந்த மாதிரி நிலைமை வந்தாலொழிய, சிலருக்கு திருப்தி இராது. இங்கே சிவில் கோர்ட் ஜுரிஸ்டிக்ஷனை எடுத்தாகிவிட்டது. தனியாக ஆதரைஸ்ட் ஆபீசர், ட்ரிப்யூனல் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இரண்டு மூன்று கோர்ட்டுகளுக்குப் போய் வருவதெல்லாம் தவிர்க்கப்பட்டிருக்கிறது. ஆதைரைஸ்ட் ஆபீசரும் ஒரு கெஜடெட் ஆபீசராகப் போடுகிறார்கள்.

"ட்வெல்லிங் ஹௌஸ்" பற்றித் திருத்தம் கொடுத்திருக்கிறேன் அதைச் சேர்ந்த நிலம் என்று போட்டிருக்கிறது. பூமி நிலம் ஒரு ஏக்கர், 50 சென்ட் இருக்கலாம். அதில் வீடு, அதைச் சுற்றி கறிகாய் போட என்று 3 அல்லது 4 சென்ட் இருக்கலாம் அது தவிர மற்ற நிலங்கள் மிராசுதார் சொந்த அனுபவத்தில் இருக்கலாம். இதிலே, டிஸ்ப்யூட் வராது. அப்படி வந்தால், அதை லிமிட் செய்ய ஆதரைஸ்ட் ஆபீசருக்கு அதிகாரம் வேண்டும். வீட்டுக்கு எவ்வளவு, கிணறு இருந்தால் அதற்கு எவ்வளவு, கறிகாய்த் தோட்டம் எவ்வளவு என்றெல்லாம் தகராறு இல்லாமல் இருக்க வேண்டும். இதிலே இருப்பது, "**and includes such other area adjacent to the dwelling house as may be necessary for the convenient enjoyment of such dwelling house.**" எவ்வளவுக்கெவ்வளவு விவசாயிகளுக்கும், மிராசுதார்களுக்கும் சுமுகமான உறவை ஏற்படுத்த வேண்டுமோ அந்த அளவில் சட்டங்கள் கொண்டுவரும்போதெல்லாம் செய்யவேண்டும். இன்றைக்கு, பல சட்டங்கள் மூலம் நல்ல சுமுகமான உறவு நிலவுகிறது. சில நாட்களுக்கு முன்பு பார்த்தால், ஏகப்பட்ட கிளர்ச்சிகள், வெட்டு, காயம், கொலை இவைகளெல்லாம் நடந்திருக்கின்றன. அப்படி நல்ல முறையில் செய்யவில்லையென்றால், இரண்டு பேருக்கும் இருக்கும் சமாதான உறவு கெட்டுப்போகும். ஆகவே, இதில் வீட்டுக்கு இவ்வளவு விஸ்தீர்ணம், பாதைக்கு இவ்வளவு, மாடு கட்ட இவ்வளவு என்றெல்லாம் தீர்மானிக்கப்பட வேண்டியிருக்கும். அதை நிர்ணயிக்க இந்த அதிகாரிக்கு அதிகாரம் கொடுக்கப்படவேண்டும். ஆகவே அவர்களிருவரிடையே சுமுகமான உறவு கெடாமல் இருக்க, நிலங்களை "பிக்ஸ்" பண்ண அமைச்சரவர்களே ஒப்புக்கொண்டு சில திருத்தங்களைக் கொடுத்திருக்கிறார்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் சொன்னார்கள், திருத்தம் எதிர்கட்சிக்காரர்கள் கொடுத்தார்கள் என்பதற்காக ஏற்றுக்கொள்ள மாட்டார்களோ என்று. காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் கொடுத்தாலும் ஏற்றுக்கொள்வதில்லை. அந்த கௌரவத்தை எனக்கும் கொடுப்பதில்லை. ஆகவே, சர்க்காரே உணர்ந்து கொண்டு வந்தால் வருவார்கள். அதுவும் ரெவின்யூ அமைச்சர் விஷயத்தில், அமெண்ட்மெண்ட் நல்லது என்றால், அதை ஆராய்ந்து அவர்களே கொண்டு வருவார்கள். அது எப்படியானால் என்ன, அபிப்பிராயம் நிறைவேறினால் சரி. நம் அமெண்ட்மெண்டைத்தான் ஒத்துக்

கொள்ளவேண்டும் என்பதல்ல நம் கருத்து. திருத்தங்களைப் பற்றி விவரமாகப்பின்னால் பேசுகிறேன். இந்த மசோதா நல்ல முறையிலே நிறைவேறி, அதிகப்படியான அப்பீல்களுக்கு இடமில்லாமல், அப்படி அப்பீல்கள் வராமல் இருக்கும் நிலையில் அமையவேண்டும் என்று கோரிக்கொண்டு, இந்த மசோதாவை ஆதரித்து முடிக்கிறேன்.

* SRI R. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நம் ரெவின்யூ அமைச்சர் கொண்டுவந்திருக்கும் இந்த மசோதாவை ஆதரித்து, ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த மசோதா மிக மிக முக்கியமான மசோதா. இந்த மசோதா சின்ன அளவில் தயாரிக்கப்பட்டிருந்தாலும், அதனால் பயனடையக்கூடியவர்கள் ஆயிரக்கணக்கானவர்கள்; லட்சக்கணக்கானவர்கள்கூடப் பலன் அடையப்போகிறார்கள். அப்படிச் சொல்லும் போது, நாம் எவ்வளவுக்கெவ்வளவு விவசாயிகள் சம்பந்தப்பட்டவரை அவர்களுக்கு நன்மை பயக்க வேண்டும் என்று சட்டங்கள் கொண்டு வருகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு மிராசுதார்களும், அந்த நோக்கங்கள் கைகூடாமல் இருக்க என்னவெல்லாம் செய்யலாமோ, அவ்வளவு செய்கிறார்கள். ஆகையினால், இந்த மசோதாவை நிறைவேற்றுவது மட்டுமல்லாமல், அதன் குறிக்கோள்கள் நல்ல முறையிலே பயன்படுத்தப்படும் வகையில், உத்தரவுகள் பிறப்பிக்க வேண்டும். விவசாயிகள் அதன் பலனை நல்ல முறையிலே பூரணமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதற்கான வாய்ப்புகள் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

குடியிருப்பு பற்றி அதிகமாகச் சொல்லத் தேவையில்லை. மக்களுக்கு குடியிருப்பு எவ்வளவு அத்தியாவசியம் என்பதைப் பற்றி நான் சொல்லித் தெரிந்துகொள்ள வேண்டியதில்லை. குடியிருப்பு வசதிகள் ஹரிஜனங்களுக்கோ அல்லது விவசாயக் கூலிகளுக்கோ, நல்ல முறையில் இல்லாததால், அவை அவர்களுக்குச் சொந்தமில்லாததால், பல்வேறு கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்த வரையில், கனம் ஸ்ரீனிவாச அய்யர் அப்பட்டமாக, மிராசுதார் மனதில் என்ன இருக்கிறதோ அதை அப்படியே சித்தரித்துப் பேசிவிட்டார்கள். தஞ்சாவூர் ஜில்லாவைப் பொறுத்தவரையில் மக்களுக்குக் குடியிருப்பு என்றால் அவர்கள் மிராசுதார் தயவில்தான் வாழவேண்டும். மிராசுதார்கள் கேட்கும் வாடகையைக் கொடுக்கவேண்டும். அப்படிக் கொடுக்காவிட்டால், உடனே அந்த வீட்டை விட்டு அப்புறப்படுத்தி விடுகிறார்கள். அவர்கள் எவ்வளவு கூலியைக் குறைத்துக் கொடுத்தாலும், இவர்கள் பேசமுடியாது. சிறு பையனை '' அவன் பள்ளிக்கூடம் போகக் கூடாது , மாடு மேய்க்க அனுப்பு '' என்றால் இவர்கள் ஒன்றும் சொல்ல முடியாது. ஆகவே, குடியானவர்கள் நன்மைக்காக இம்மாதிரியான மசோதா கொண்டுவந்து அவர்களுக்கு நல் வாழ்வு அளிப்பது பற்றி உண்மையிலேயே நாம் எல்லோரும் பெருமைப்பட வேண்டும். இம்மாதிரி மசோதாக்களின் முழுப் பலனையும் அவர்கள் அடையும்படி ஏற்பாடுகள் செய்யவேண்டும். இதுவரை இருந்துவரும் '' போர்ஸ்ட் லேபர் '' முறை, அவர்களை வற்புறுத்தி வேலை வாங்கும் முறை, இந்த மசோதாவினால் நிறுத்தப்படும் என்று நம்புகிறேன்.

தஞ்சை ஜில்லாவிலே பரம்பரையாக இந்தக் குடியானவர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே அங்கேயிருக்கிறார்கள் என்பதை நாம் கவனிக்க வேண்டும். ஏதோ சிலர் சொல்லுவது மாதிரி, மிராசுதார்களுக்குதான் அந்த இடம் சொந்தமென்றும் இவர்கள் வேறு எங்கேயிருந்தோ வந்ததாகவும் பேசுகிறார்கள். இது மிகவும் தவறு. ஆதி காலத்திலிருந்தே அவர்கள் அங்கே இருக்கிறார்கள். வேறு எங்கிருந்து வந்திருப்பார்கள் ? ஒரு சில பணக்காரர்கள், அவர்களுடைய சூழ்ச்சியின் காரணமாக, அந்த இடங்களையெல்லாம் தாங்களே ஆக்ரமித்துக்கொண்டு, தங்களுக்கு அவர்கள் வேலை செய்யவேண்டுமென்பதற்காக தாங்கள் நல்வாழ்வு வாழவேண்டுமென்பதற்காக தங்களுக்கு வேலையாட்களாக அவர்களை வைத்துக்கொண்டிருந்தார்கள். அம்மாதிரி வைத்துக் கொண்டிருந்ததால்தான் அவர்கள் நல் வாழ்வு வாழ முடிந்தது. எப்படி அவர்கள் தாங்கள் நல்வாழ்வு வாழ வேண்டுமென்று நினைத்தார்களோ அந்த அளவுக்கு இந்தக் குடியானவர்

களும் வாழ வேண்டும் என்ற நினைப்பு அவர்களுக்கு கிடையாது. அம்மாதிரி நினைத்திருந்தால் இன்று நிலைமை வேறு விதமாக இருந்திருக்கும். நான் குறிப்பாக ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்றிருக்கிறேன். என்னுடைய தொகுதியைப் பொறுத்த வரையில் அங்கேயுள்ள கிராமங்களில் உள்ள சாதாரண குடிசையை அளந்து பார்த்தால் 10 அல்லது 12 அடி நீளம், 7 அல்லது 8 அடி அகலம்தான் இருக்கும். இந்தக் குடிசையும்கூட இந்த மிராசுதார்கள் ஆக்கிரமித்துக்கொண்டு வருகிறார்கள். இம்மாதிரியான நிலைமை இன்னும் அங்கே நிலவி வருகிறது. ஆகவே நாம் இந்த மசோதாவை இங்கே நிறைவேற்றுகிறபொழுது அதை நல்ல முறையிலே அமுல் நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

"விவசாயக் கூலிகள்" என்று மசோதாவிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. உண்மையில் அங்கே உள்ள நிலைமையை எடுத்துக்கூற விரும்புகிறேன். விவசாயக் கூலிகள் மட்டும்தான் வீடில்லாமல் இருக்கிறார்கள் என்பதில்லை. கொஞ்சம் நிலபுலம் வைத்திருப்பவர்களும்கூட வீடில்லாமல் தவிக்கிறார்கள். 10 ஏக்கர் அல்லது 20 ஏக்கர் என்று வைத்திருப்பவர்களுக்குக்கூட வீடு கிடையாது. நிலத்திற்கு பக்கத்தில் அவர்கள் வீடு கட்டிக்கொண்டு வாழ முடியாது. ஆனால் எந்தக் கிராமத்தில் நிலமிருக்கிறதோ அந்தக் கிராமத்தில் தான் அவர்கள் இருக்கவேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. இப்பொழுது நான் குறிப்பிட்ட விவசாயிகளிலே ஒரு சிலர் ஓரளவுக்கு வசதியுள்ளவர்களாக இருக்கிறார்கள் என்று சொன்னால், அந்த நிலைமை சமீப காலத்தில்தான் ஏற்பட்டது என்று சொல்லவேண்டும். ஆனால் நிலைமை எப்படி இருக்கிறது என்றால், ஏற்கெனவே மிராசுதார்களாக இருந்தவர்கள் இவர்களுடைய இடத்திற்கு பாத்தியம் கொண்டாடி அவர்களை துரத்துகிறார்கள். அம்மாதிரி கொஞ்சம் வசதியுள்ளவர்களுக்கு இலவசமாக கொடுக்காவிட்டாலும்கூட, அவர்களிடமிருந்து பணத்தை வசூல் செய்து கொண்டாலும்கூட அவர்களை அப்புறப்படுத்தாமல் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நான் இப்படிச்சொல்லும்பொழுது வசதியுள்ளவர்களுக்கு ஏன் கொடுக்கவேண்டு மென்று சொல்கிறீர்கள் என்று என்னைக் கேட்கலாம். வசதியுள்ளவர்களுக்கு இலவசமாக செய்துகொடுக்க வேண்டாம். மூன்று வருடத்திற்கு அப்புறப்படுத்தக்கூடாது என்ற சட்டத்தை கொண்டுவந்து இருக்கிறோம். அவர்கள் குடியிருக்கக்கூடிய இடங்களை அவர்களுக்கே சொந்தமாக்கிக் கொடுப்பதில் என்ன கஷ்டம் இருக்கிறது என்பது புரியவில்லை. நம்முடைய அமைச்சரவையானது ஏழைகளுக்கு என்றென்றும் உதவி செய்து வர வேண்டும் என்ற குறிக்கோளைக்கொண்டு செயலாற்றி வருகிறது. இந்த மந்திரிசபை இதைச் செய்யவில்லையென்றால் வேறு எந்த மந்திரி சபைதான் துணிச்சலாக இதைச் செய்ய முடியும் என்று தெரியவில்லை. நாம் இப்பொழுதெல்லாம் சட்டம் போட்டுக்கொண்டு வருகிறோம். அப்புறம் இரண்டு வருடங்களுக்கு எக்ஸ்டென்ஷன் பண்ணுகிறோம். ஆகவே அடுத்த தடவை கொண்டு வரும்பொழுதாவது அவர்களுக்கு இந்தக் குடியிருப்பு இடத்தை சொந்தமாக்கிக் கொடுக்கக்கூடிய வகையிலே ஒரு மசோதாவை கொண்டுவர வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக "ஆதரைஸ்டு ஆபீசர்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதற்காக ஒரு கெஜட்ட் ஆபீசரை போடுவோம் என்று சொல்லியிருக்கிறார்கள். இதற்கு தனியாக ஒரு கெஜட்ட் ஆபீசரை நியமிக்க வேண்டிய அவசியமில்லை. ஜில்லா ஹரிஜன வெல்பேர் ஆபீசரையே ஆதரைஸ்டு ஆபீசராக நியமித்தால் இந்த வேலையெல்லாம் நல்ல முறையில் நடக்கும். அவருக்கு இதிலே நல்ல பழக்கம் உண்டு. ஆகவே ஜில்லா ஹரிஜன வெல்பேர் ஆபீசரை "ஆதரைஸ்டு ஆபீசராக" நியமிப்பது மிகவும் நல்லது என்று கூறிக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : I allot ten minutes for each hon. Member.

SRI P. JAYARAJ : உதவி சபா நாயகர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற குடியிருப்பு மசோதாவை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். இது ஒரு முக்கியமான மசோதா. எப்படி நிலத்திற்கு உச்சவரம்பு விதிப்பது

[Sri P. Jayaraj] [31st August 1961

அவசியமோ அதே மாதிரி இன்று குடியிருக்கும் இடத்திற்கும் சர்க்கார் பாதுகாப்பு அளிப்பது மிகமிக அவசியம். தஞ்சை ஜில்லாவைப் பொறுத்த வரையில் விவசாய தொழிலாளர்களும், ஹரிஜன மக்களும் 100-க்கு 80 பேர்கள் மிராசுதார்களுடைய மனைக்கட்டுகளிலேதான் குடியிருக்கிறார்கள். பண்டைக்காலத்திலிருந்தே, அதாவது தமிழர்கள் ஆண்டார்கள் என்று சொல்லுகிறார்களே அக்காலத்திலிருந்தே அங்கே இருக்கிறார்கள். ஹரிஜனங்கள் குடியிருக்கிற இடம் ஜாரிநத்தம், புறம்போக்கு என்று அடங்கலிலே சொல்லப்பட்டிருக்கிறது. அத்தகைய ஜாரிநத்த மனைகளிலே ஹரிஜனங்களும், விவசாய தொழிலாளர்களும் நூற்றுக்கணக்கான வருஷங்களாக இருந்து வருகிறார்கள். ஆனால் இன்றுள்ள நிலைமை என்ன? மிராசுதார்கள் அவர்களை அந்த மனைகளிலிருந்து வெளியேற்றுகிறார்கள். தங்களுக்கு வேலை செய்யவில்லை, குறைந்த கூலி பெற்றுக்கொண்டு வேலை செய்ய முன்வரவில்லை என்ற காரணத்தைக்காட்டி 1955-ம் வருடம் முதல் பல ஆயிரக்கணக்கானவர்களை வெளியேற்றி இருக்கிறார்கள். நமக்கு சுதந்திரம் கிடைத்த பிறகு, ஹரிஜன மக்களும் விவசாயத் தொழிலாளர்களும் ஓட்டுரிமை பெற்ற பிறகும் கூட குடியிருப்பதற்கு அவர்களுக்கு இடமில்லையென்று சொன்னால், சுதந்திரம் பெற்ற பிறகும் கூட இந் நாட்டிலே அவர்கள் வாழ்வதற்கு தகுதியில்லை என்றுதானே பொருள்படும். ஆகவே அந்த ஏழை ஹரிஜன மக்களை வெளியேற்றாமல் இருப்பதற்கு இந்த மாதிரி குடியிருப்பு பாதுகாப்பு சட்டத்தை கொண்டு வருவது மிகவும் பொருத்தமானது. எனக்கு முன்னால் பேசிய ஒரு அங்கத்தினர் சொன்ன மாதிரி, எப்படி நிலத்தை விற்கிறார்களோ அந்த முறையிலே இந்த ஆட்களையும் சேர்த்து விற்கிற அளவுக்கு இந்த உழவர்கள் விஷயம் இருந்து வருகிறது. இப்படி ஆட்களையும் சேர்த்து விற்கின்ற நிலைமையை வேறெந்த நாட்டிலும் பார்க்க முடியாது. மிராசுதாரகள் கொடுக்கிற கூலிக்கு அவர்கள் வேலை செய்யவில்லை என்ற காரணத்தினாலே அவர்களை மனையை விட்டு அப்புறப்படுத்துவது, முள் வைத்து அடைப்பது போன்ற காரியங்களை எல்லாம் செய்து வருகிறார்கள். மாயவரம் முன்சீப் கோர்ட்டிலே சமீபத்திலே ஒரு வழக்குத் தொடரப்பட்டு, ஒருவரை குடியிருப்பு மனையிலிருந்து காலி செய்திருக்கிறார்கள். அவர் தென்னந்தோப்பையும், வீட்டையும் வைத்துக் கொண்டிருந்தார். வழக்குத் தொடர்ந்ததிலே தென்னந்தோப்பைப் பொறுத்தவரையில் அவருக்கு சாதகமாகவும், ஆனால் குடியிருப்பு மனையைப் பொறுத்த வரையில் காலி செய்ய வேண்டும் என்ற முறையிலே தீர்ப்பளிக்கப்பட்டது. சாகுபடி செய்ய உரிமையிருக்கிறது, ஆனால் குடியிருக்க உரிமையில்லை என்பதை நாம் பார்க்கிறோம். யாராயிருந்தாலும் செத்த பிறகு அடக்கம் செய்கிற இடம் சர்க்கார் புறம்போக்காக இருக்கிறது. இப்படி சர்க்கார் புறம்போக்கில் அடக்கம் செய்வதற்கு இடம் கொடுக்கிற பொழுது குடியிருப்பதற்கும் இடம் கொடுக்க சர்க்கார் முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

சென்ற 15 நாட்களுக்கு முன்பு நன்னிலம் தாலூகாவிலே கொத்தமங்கலம் என்ற ஊரிலே ஹரிஜன மக்கள் குடியிருந்த இடத்தை முள் வேலி போட்டு அடைத்துவிட்டு, தென்னங்கன்றுகளை நட்டிருக்கிறார்கள். இதெல்லாவற்றையும் சர்க்கார் கவனித்து குடியிருப்பு மனைவசதி இல்லாதவர்களுக்கு உதவி செய்ய முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். (10-30 a.m.) மூன்று வருஷங்கள் என்று இருப்பதை நிரந்தரமாகச் செய்யவேண்டும். அவை. சர்க்கார் நிலமேயொழிய ஜாரிநத்தம் என்று சொல்ல முடியாது. மிராசுதார்களுக்குப் பாத்தியம் இருப்பதாகத் தெரியவில்லை. இதற்குத் தனி அடங்கல் இருக்கிறது. நீண்டகாலமாக ஹரிஜனங்கள் அல்லது விவசாயத் தொழிலாளர்கள் இருந்து வந்திருக்கிறார்கள். அதில் வசதி படைத்தவர்கள், படிக்கத் தெரிந்தவர்கள் சமுதாயத்திற்குச் சொந்தம் என்ற அடிப்படையில், 50 ஏக்கர் இருந்தால் அதை ஐந்து மிராசுதார்கள் ஆளுக்குப் பத்து ஏக்கர் வீதம் பிரித்து தங்களுக்குத்தான் பாத்தியம் என்று வைத்துக்

31st August 1961] [Sri P. Jayaraj]

கொண்டிருக்கிறார்கள். இது சரி அல்ல. ஆகவே, எங்கெங்கே ஜாரி நத்தம் இருக்கிறதோ, எங்கெங்கே சர்க்கார் நிலம் இருக்கிறதோ, அவைகளை நிரந்தர மாக ஹரிஜனங்களுக்குப் பட்டா செய்வதற்கு வழி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த நல்ல மசோதாவை ஏழை மக்களுக்காகக் கொண்டு வந்த அமைச்சர் அவர்களையும் பாராட்டி, இது நிரந்தரமாகப் பலன் அளிக் கும்படி செய்யவேண்டுமென்று கூறி என்னுடைய உரையை முடித்துக் கொள்கின்றேன்.

**Sri S. NAGARAJA MONIGAR :** கனம் உதவி சபாநாயகர் அவர் களே, குடியிருப்புப் பாதுகாப்பு சம்பந்தமான இந்த மசோதாவை நான் முழு மனதுடன் ஆதரித்து ஒரு சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன்.

இந்த மசோதாவின் 2 (6)-வது ஷரத்திலே 'குடியிருப்பு' என்பதற்கு டெபனிஷன் தரப்பட்டிருக்கிறது. 'அக்ரிகல்சரிஸ்ட்' அல்லது 'அக்ரிகல்சரல் லேபரர்' இவர்கள் வீடு கட்டிக்கொண்டிருந்தால் அவர்களுக்கு மட்டுந்தான் பாதுகாப்பு என்று அர்த்தம் ஆகிறது என்று நான் நினைக்கிறேன். விவசாயி களுக்கு முக்கியமாகத் தேவைப்படுவது கார், அரிவாள், மற்றும் இரும்புச் சாமான் முதலியன. அவைகளைச் செய்துதர கருமார் ஒவ்வொரு கிராமத் திலும், விவசாயிகள் தங்கியிருப்பது போலவே தங்கியிருக்கிறார்கள். தங்கி யிருக்க வேண்டியது அவசியமும் ஆகும். அவர்களைப் போலவே நாவிதர், சலவைத் தொழிலாளி போன்றவர்களும் கிராமங்களில் குடும்ப மாக வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். 'விவசாயத் தொழிலாளர்' என்று மாத்திரம் இம் மசோதாவில் கண்டிருக்கிறது. அத்துடன், கருமார், நாவிதர், சலவைத் தொழிலாளி போன்றவர்களும் சேர்த்துக்கொள்ளப் படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதற்கு இம் மசோதாவில் வழி செய்வார்கள் என்றும் நம்புகிறேன்.

ஒரு கிராமத்தில் பொது இடமாக சாவடி இருக்கும். இது பல கால மாக அனுபவத்தில் இருந்துகொண்டிருக்கும். இதற்கும் மசோதாவில் இடம் அளிக்கப்படவேண்டும்.

விவசாயி குடியிருக்கும் இடத்திற்குப் பக்கத்தில் மாடு கட்டிக்கொள்ள வும், விவசாயக் கருவிகளை வைத்துக்கொள்ளவும் இன்னொரு குடிசை போட்டுக்கொண்டிருப்பது வழக்கம். ஒரு குடிசையில் வசித்துக்கொண்டு, பக்கத்துக் குடிசையை இதுபோன்ற காரியங்களுக்குப் பயன்படுத்திக்கொள்வ துண்டு. ஒன்றுக்கு மேற்பட்டு குடியிருப்பு இதுபோன்று வைத்துக்கொண் டிருக்கலாம். 'அட்ஜஸன்ட் டு தி ட்வெலிங் ஹவுஸ்', 'கன்வீனியன்ட் என்ஜாய்மென்ட் . . .' என்று சொல்லப்பட்டிருப்பவை திட்டமாக இல்லை. ஆதலால், கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் சொன்னது போல், அவைகளைத் திட்டவட்டமாகக் குறிப்பிடவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கின்றேன்.

(An hon. Member was found standing.)

**DEPUTY SPEAKER :** When an hon. Member is speaking, another hon. Member should not stand in the House.

**Sri S. NAGARAJA MONIGAR :** வாடகை கொடுத்து வீடு கட்டிக் கொண்டு குடியிருப்பவர்கள் என்று மசோதாவில் கண்டிருக்கிறது. நான் ஒரு இடத்தைப் பற்றிக் குறிப்பிட விரும்புகிறேன். ஒரு இடத்தில் வெகுகால மாகவே சிலர் குடியிருந்து வருகிறார்கள். அவர்கள் முதலில் பல வருஷங் கள் வாடகை நிலச் சொந்தக்காரர்களுக்கு ஏதாவது கொடுத்து வந்தார் களோ என்னவோ. இருந்தாலும், குடியிருப்பவர்களுக்கும் நிலச் சொந்தக் காரர்களுக்கும் ஒரு சம்பந்தம் இருந்து கொண்டிருக்கிறது. அவர்களே சில சமயங்களில் அங்குள்ள இடங்களில் இன்னும் கொஞ்சம் விஸ்தரித்துக் கொள்ளவோ, இருக்கும் வீட்டைத் திருப்பிக் கட்டவோ, நிலச் சொந்தக்காரர் கள் சமயத்திலே கஷ்டம் கொடுக்கிறார்கள். இந்த மசோதாவில் 'வாடகை கொடுத்து இருப்பவர்கள்' என்று தான் இருக்கிறது. அதிலே 'வாடகை கொடுக்காமல் பழக்கமாக இருப்பவர்கள்' என்பதைச் சேர்த்துக்கொள்ளு மாறு நான் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்றாவது ஷரத்திலே, ஸப்-ஸெக்ஷன் (3)–இலே, 'இன்ஜுரியஸ் டு தி குடியிருப்பு' என்று இருக்கிறது. குடியிருப்புக்குக் கெடுதல் செய்பவர்களுக்கு இது செல்லாது என்று கண்டிருக்கிறது. எது இன்ஜுரியஸ், எது இன்ஜுரியஸ் இல்லை என்பது திட்டமாகக் குறிப்பிடப்படவில்லை. அதற்கும் தகுந்த விளக்கம் தருவார்கள் என்று நான் நம்புகிறேன். இம்மாதிரியான முக்கிய அம்சங்களைக் கொண்ட இந்த மசோதா வருவதை நான் வரவேற்று, கூடிய சீக்கிரத்தில் இவைகளுக்கு நிரந்தரமான பரிகாரத்தைச் சர்க்கார் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவை வரவேற்று, இதிலே இருக்கும் பல குறைபாடுகளையும் ஆளும் கட்சியைச் சார்ந்த கனம் அங்கத்தினர்களும், எதிர்க் கட்சி அங்கத்தினர்களும் சொல்லியிருக்கிறார்கள். இந்த மசோதாவில் வரவேற்கத்தக்க அம்சங்கள் இருக்கின்றன. எனக்கு முன் பேசிய திரு. நாகராஜ மணிகார் அவர்கள் எடுத்துக் கூறியது போல், கிராமங்களில் தச்சு வேலை செய்யக் கூடியவர்கள், நாவிதர்கள், சலவைத் தொழிலாளர்கள் போன்றவர்கள் விவசாயிகளுக்கும், விவசாய வேலைகளுக்கும் உதவிகரமாக இருந்து, அங்கேயே குடியிருக்கிறார்கள். அதேபோன்று தண்ணீர் இறைப்பதற்குச் சால் தைத்துக்கொடுக்கக்கூடிய அருந்ததியர்களும் இருக்கிறார்கள். அது கனம் அமைச்சருக்குக் கூடத் தெளிவாகத் தெரியும். ஆதிகாலத்திலிருந்து இந்தக் காலம் வரையில் இத் தொழிலில் இவர்கள் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள். 'விவசாயத்தில் ஈடுபட்டு வந்திருக்கக்கூடியவர்கள்' என்ற வகையில் இவர்களும் சேர்த்துக்கொள்ளப்படவேண்டும். மின்சாரம் விவசாயத்திற்கு எப்படி உதவியாக இருக்கிறதோ, அதே போன்று மின்சாரம் வருவதற்கு முன்னால் தண்ணீர் இறைக்க இவர்கள் சால் தைத்துக்கொண்டிருந்தார்கள். இப்பொழுதும் ஒரு சில இடங்களில் இவ் வேலை நடந்துகொண்டிருக்கிறது. இவ்வேலை செய்பவர்கள் நிலத்தில் நிரந்தரமாகக் குடிசை போட்டு வாழக்கூடிய நிலைமையில் இருக்கிறார்கள் என்பதை பார்க்கிறோம். ஆகவே தான், 'அக்ரிகல்சரல் லேபரர்' 'அக்ரிகல்சரல் லாண்டு', 'அக்ரிகல்சரிஸ்ட்' என்பவைகளில் சரியான விளக்கம் இல்லை என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். நான் மேலே குறிப்பிட்டவர்களுக்கும் விவசாயிகளுக்குமான பாதுகாப்பு இருக்கும் வகையில், அவர்களும் விவசாய நிலத்திலிருந்து வெளியேற்றப்படமாட்டார்கள் என்ற வகையில் இந்த மசோதாவில் தெளிவாக விளக்கம் தரப்படவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

'அக்ரிகல்சரல் லேபரர்' என்பதற்கு விளக்கம் தரும்போது, '**a person whose principal means of livelihood is the income he gets as wages for his manual labour on agricultural land**' என்று இருக்கிறது. 'அறுவடை நேரத்தில் மேல் முறையாக வாங்கிக் கொண்டு விவசாயத்திற்கு உதவி செய்யக்கூடியவராக இருந்தபோதிலும், என்று மசோதாவில் குறிப்பிடப்பட்டிருந்தால் நலமாக இருக்க முடியும். எந்த முறையில் இது போடவேண்டுமென்பதை கனம் அமைச்சர் கவனிக்க வேண்டிய விஷயம். அருந்ததியர்கள் என்று சொல்லக்கூடியவர்கள் மிகவும் தாழ்த்தப்பட்டவர்கள். மிக மோசமான நிலைமையிலே இருக்கக் கூடியவர்கள் அவர்கள். அருந்ததியர்கள், தச்சு வேலை செய்யக்கூடியவர்கள், நாவிதர்கள், சலவைத் தொழிலாளர்கள் இவர்களும் விவசாயிகளுக்கும் விவசாயத்திற்கும் பெரிய அளவு உதவியாக எப்போதும் இருந்து வருகிறவர்கள் என்ற அடிப்படையில் அவர்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். அப்படிச் சேர்க்கவில்லையென்றால், கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் சொல்வதுபோல், எப்போதும் நிரந்தரமாக கோர்ட்டுகள் இருக்கவேண்டும், வக்கீல்கள் இருக்கவேண்டும் என்று சொல்லக்கூடிய அளவுக்கு, வக்கீல்களின் எண்ணிக்கை பெருகவேண்டிய நிலைமை ஏற்படும். பரம ஏழைகளாகிய இவர்கள் வக்கீல் வைத்து, கோர்ட்டுக்குப் போய் வாதாடி வெற்றி பெறக்கூடிய நிலைமை ஏற்படவே முடியாது. ஆகவே தான், சட்டத்திலே திட்டவட்டமாகக் குறிப்பிட்டுவிட்டால் இப்படிப்பட்டவர்களுக்கு ஓரளவு பாதுகாப்பாக இருக்க முடியும். திட்ட

வட்டமாகக் குறிப்பிட்டிருந்தாலேயே அவர்கள் வெற்றி காண முடியாத அளவுக்குப் பல பிரச்னைகள் இருக்கின்றன என்பதைப் பார்க்கிறோம். ஆகவே, அமைச்சர் அவர்கள் நான் சொன்ன யோசனைகளைத் தயவு செய்து ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அருந்ததியர்கள், தச்சு வேலை செய்பவர்கள், நாவிதர்கள், சலவைத் தொழிலாளர்கள் குடியிருப்பு கட்டி வசிக்கிறார்கள் என்றால், அவர்களை வெளியேற்றக் கூடாது என்ற யோசனையை ஏற்றுக்கொண்டு, சட்டத்தில் வழி செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

மூன்று வருஷ காலம் என்பதை நிரந்தரமாக வைத்தால் நன்றாக இருக்கும். மூன்று வருஷம் என்று ஏன் போடப்பட்டிருக்கிறது என்பது எனக்குப் புரியவில்லை. நிலச் சீர்திருத்த மசோதாவை நிறைவேற்றக்கூடிய நேரத்தில் பெரிய அளவுக்கு, கூச்சல் இல்லாத அளவுக்கு இந்த நேரத்திலே மூன்று வருஷம் என்று போட்டுக்கொண்டு, பிறகு இஷ்டம்போல் எப்படியும் செய்யலாம் என்ற அடிப்படையில் இந்த மசோதா இப்படிக் கொண்டு வரப்படுகிறதோ என்று கூட சந்தேகப்படவேண்டிய நிலைமையில் இருக்கிறது. ஆகவே தான் இதை மூன்று வருஷம் என்பதற்குப் பதிலாக அது நிரந்தரமான ஒரு சட்டமாக வந்தால் அவர்களுக்கே அந்த நிலத்தைச் சொந்தமாக்கக் கூடிய தன்மையிலே வந்தால் மிகமிக வரவேற்கக் கூடிய ஒரு மசோதாவாக இருக்க முடியும் என்று தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

**Sri A. GOVINDASAMY**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தக் குடியிருப்பு பாதுகாப்பு மசோதா ஒரு நல்ல மசோதாவாக இருக்கிற நேரத்தில் இதில் இருக்கக்கூடிய குறைபாடுகளையும் கவனித்து அதை நீக்கிவிட்டால் அதைக் கொண்டு வந்திருக்கக்கூடிய அமைச்சருக்கும் நல்ல பெயர், குடியிருப்பு விவசாயத் தொழிலாளர்களுக்கும் ஒரு மன நிம்மதி ஏற்படும். 1959-ம் வருஷம் மார்ச் 31-ந் தேதியில் பாதுகாப்பு இருக்கிறது. ஆனால் இன்றைய தேதியில் இருந்தே பாதுகாப்பு கொடுக்கும் பட்சத்தில் விவசாயத் தொழிலாளர்களுக்குப் பெருத்த நன்மை ஏற்படும் என்ற கருத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரண்டாவதாக, இந்த மசோதாவின் மூன்றாவது ஷரத்து, உட்பிரிவு 3ஏ-ல் "If he has done any act or is guilty of negligence which is destructive or injurious to kudiyiruppu." என்று இருக்கிறது. இந்த ஷரத்து விவசாயத் தொழிலாளர்களை நிலத்தை விட்டு வெளியேற்றுவதற்குத் தான் பயன்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அந்த நிலத்தில் குடியிருக்கக்கூடிய விவசாயி ஆடுமாடுகளுக்கென்று தழை கழித்துப்போட்டாலும், வேலி கட்டவில்லை, அதனால் மாடு வந்து மேய்ந்துவிட்டது என்றாலும் நெக்லிஜன்ஸ் ஆப் ட்யூடி என்று எதையாவது சொல்லி வெளியேற்ற வழியேற்பட்டுவிடும். ஆகவே இந்த ஷரத்தையே அடியோடு நீக்கிவிடவேண்டுமென்று நான் தெரிவித்துக்கொள்கிறேன். அதை நீக்கிவிட்டால் விவசாயத்தொழிலாளர்களுக்குப் பெருத்த நன்மை ஏற்படும். இந்தச் சட்டத்தினால் பெருவாரியாக ஆதித்திராவிட மக்கள், பின் தங்கிய மக்கள் போன்றவர்கள்தான் பயன் அடைவார்கள். அவர்களுக்கு உண்மையில் நல்லதொரு பாதுகாப்பை அளித்தாகவேண்டும். ஆனால் மிராசுதார்களுக்குச் சாதகமாக இருக்கக்கூடிய ஒன்றிரண்டு ஷரத்துக்களை நீக்கிவிட்டால்தான் அவர்களுக்குப் பூரண பாதுகாப்பு ஏற்படும். இல்லாவிட்டால் குடியிருப்பு நிலத்திலிருந்து வெளியேற்றப்பட்டு, பின்னர் கோர்ட்டிலே சென்று வாதாடி, கஷ்டமும், நஷ்டமும் அடைகிற நிலைமை தான் ஏற்படும். ஆகவே எதிர்காலத்தில் எந்தவிதமான தொந்தரவும் ஏற்படாமல் இருக்க இந்த ஷரத்தை நீக்கிவிடவேண்டுமென்ற என் கருத்தை வலியுறுத்தி நான் முடித்துக்கொள்கிறேன்.

**Sri K. R. NALLASIVAM**: மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, உண்மையில் இந்த மசோதா எல்லோராலும் வரவேற்கப்படக் கூடிய மசோதா. பொதுவாக இந்த மசோதாவின் மூலமாக நண்பர்

கோவிந்தசாமி குறிப்பிட்டது போல் ஹரிஜனங்கள் தான் பலன்பெற இருக்கிறார்கள். இன்றைக்கு ஹரிஜனங்களில் பெரும்பான்மையோர் பிறருக்குச் சொந்தமான நிலத்தில் குடியிருக்கிறார்கள். அவர்கள் நிலத்தில் இவர்கள் குடியிருப்பதனாலேயே இலவசமாக அவர்களுக்கு இவர்கள் வேலை செய்ய வேண்டியிருக்கிறது. ஆடு, மாடுகளுடைய உரத்தை அவர்கள் வாடகைக்கு வசூல் செய்துகொள்வது போல இலவசமாக எடுத்துச் சென்றுவிடுகிற பழக்கம் இருக்கிறது. இதை மறுக்கிறபோது இவர்கள் வெளியேற்றப் படுகிற நிலைமை—பத்து வருஷம், எட்டு வருஷம் இருந்தவர்களைக் கூட—அங்கங்கே ஏற்படுகிறது. இந்தச் சட்டத்தின் மூலமாக இப்போது ஓரளவு நன்மை ஏற்படுகிறது. ஆனால் ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன். இந்த நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும். அது கிடையாது. சட்டத்தை இப்போது 3 வருடத்திற்குக் கொண்டுவந்தாலும் நில ஆர்ஜிதம் செய்ய தக்க நடவடிக்கை எடுத்துக் கொண்டு இந்த நிலங்களை அவர்களுக்கே நிரந்தரமாக வழங்க ஏற்பாடு செய்வதுதான் சரியான பரிகாரம் என்று சொல்லி, இது மிகவும் வரவேற்கத்தக்க மசோதா, இதை ஆதரிக்கிறேன் என்று சொல்லி என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*THE HON. SRI M. A. MANICKAVELU: இந்த மசோதாவில் இருக்கிற சில ஷரத்துக்கள் லாண்டு சீலிங் பில்லிலேயே இருந்தன. அதில் இருந்தால் அமுல் செய்ய காலதாமதம் ஆகும். இந்த ஒரு பிரிவாவது உடனடியாக வரவேண்டும் என்று கருதி இதைத் தனியாகக் கொண்டு வந்திருக்கிறோம். இதிலே முக்கியமான நோக்கம் என்னவென்றால்—மற்ற ஜில்லாக்களைக் காட்டிலும் தஞ்சை ஜில்லாவில் எல்லாம் நஞ்சை பூமியாக இருப்பதால் குடியிருப்புப் பிரச்சனை இருக்கிறது. ஒரு விவசாயி தான் சாகுபடி செய்கிற பூமிக்கு அருகிலேயே ஒரு மூலையில் கொஞ்சம் இடத்தில் இருப்பான். ரொம்ப நாளாகவே இருந்துவந்திருப்பான். இப்போது நிலச்சீர் திருத்தச் சட்டம் வரப்போகிறது என்ற காரணத்தினால் பலர் நிலத்தை விற்க முற்பட்டபோது நிலத்தை வாங்கக் கூடியவர்கள் அந்தக் குடியிருப்பவரை அப்புறப்படுத்தி முழு நிலத்தையும் கொடுத்தால் வாங்கிக்கொள்வதாகச் சொல்வதால் பலர் நிலத்தைவிட்டு வெளியேற்றப்படுகிறார்கள் என்கிற தகவல் நமக்குக் கிடைத்தது. அதற்கு ஒரு பாதுகாப்பு வேண்டுமென்று இந்த மசோதாவைக் கொண்டுவந்தோம். சாதாரணமாகப் பயிர் செய்கிறவன் தான் அந்தமாதிரி நிலத்தின் ஓர் மூலையில் இருப்பான். சிலயிடங்களில் விவசாயத்திற்கு அனுசரணையாக உள்ள கருமான், வண்ணான், சால் தைக்கிறவன் எல்லாம் இருப்பான். பெருவாரியாக இருக்கக் கூடியவர்களுக்காகத்தான் இந்த மசோதா. இது 3 வருஷம் தானே, இதை 5 வருஷமாக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. நில ஆர்ஜிதம் செய்யவேண்டும், நிரந்தர பாதுகாப்பு ஏற்பட வழி செய்யவேண்டும் என்கிறபோது அதற்குக் கொஞ்சம் காலதாமதமாகலாம், இடையில் பாதுகாப்பு வேண்டும் என்பதற்காகத்தான் இப்போது 3 வருஷம் என்று கொண்டுவந்திருக்கிறோம். இந்தக் காலம் போதுமானது என்று சொல்ல விரும்புகிறேன்.

மிராசுதார்கள் ரொம்பக் கடுமையாக இந்த விவசாயிகளை நடத்துகிறார்கள், வீட்டுவேலை செய்யவேண்டும், அடிமை வேலை செய்யவேண்டும் என்பதாக எல்லாம் பேசப்பட்டது. இது பழைய கதை. வீணாக இப்போதும் அதையே திரும்பத் திரும்பச் சொல்லி எரிகிற கொள்ளியிலே எண்ணெயை விட்டாற் போலச் செய்வது கூடாது. காலம் படிப்படியாக ரொம்ப மாறிவந்துவிட்டது. இப்போது அப்படிப் பேசுவதால் லாபம் இல்லை. ஏதோ நானும் பேசிவிட்டேன் என்று கிதாப்பு அடித்துக்கொள்ள வேண்டுமானால் பயன்படும். வேறு லாபம் கிடையாது.

இன்னொன்று 'அட்ஜ்செண்ட் ஏரியா' என்றால் அந்தக் குடிசைக்கு பக்கத்தில் நியாயமாக மாடு கட்டிக்கொள்ள, இதர உபயோகத்திற்கான இடங்களைக் குறிக்கிறது. அதற்காக ஒரு பங்களாவைச் சுற்றி ஒருவர் 3 ஏக்கரா வைத்திக்கிறார், அதுபோல இதைச் சுற்றி அரை ஏக்கராவாவது இருக்க வேண்டும் என்பது சரியல்ல.

31st August 1961] [Sri M. A. Manickavelu]

ஓராளவிற்கு மாட்டைக் கட்ட இடம் வேண்டும், அதைக் கொடுப்பது அவசியம். ரூல்ஸில் எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படிச் செய்யலாம். பின்னர், திருத்தம் கொடுப்பதில் எதிர் கட்சியிலிருந்தும் கொடுக்கலாம், மற்றவர்களும் கொடுக்கலாம். திருததம் கொண்டுவந்து நிறைவேற்றிய பெருமையை அவர்களுக்கு கொடுககக்கூடாது என்று அரசாங்கமே திருத்தம் கொண்டு வருகிறார்கள் என்று சொல்கிறார்கள். அப்படியல்ல. அவர்கள் கொடுத்திருக்கிற திருத்தப்படி திருத்த வேண்டுமென்று சர்க்கார் உணர்ந்து தான் அரசாங்கமே அதேமுறையில் கொடுக்கிறார்கள். சில சமயம் திருத்தம் கொடுத்த ஆசாமியே இங்கு இருப்பதில்லை. மூவ் செய்ய ஆள் இல்லாமல் போய்விடுகிறது. ஆகவே நல்ல திருத்தம் வீணாக ஆள் இல்லாததினால் போவதைவிட அதற்கு பந்தோபஸ்துதான் செய்யப்படுகிறது, அதை அரசாங்கம் கொண்டு வருவதால். ஆகவே அப்படி அரசாங்கம் கொண்டு வருவதை வரவேற்கவேண்டும். ஏதாவது குற்றச்சாட்டு சாட்ட வேண்டுமென்று சொல்லக்கூடாது. அப்படி குற்றம் சாட்டும்போதுகூட ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். ஒன்று "ஹாலோ" என்று வந்து விட்டால் மற்றவைகளும் அப்படித்தான் இருக்கும் என்று வந்து விடும். மற்றவைகளைப் பற்றி ஷரத்துவாரியாக வரும்போது பேசலாம். இப்பொழுது இந்த மோஷன் பாஸ் செய்து பின் ஷரத்துவாரி விவாதத்தை எடுத்துக்கொள்ளலாம்.

DEPUTY SPEAKER : The question is—

"That the Madras Occupants of Kudiyiruppu (Protection from Eviction) Bill, 1961 (L.A. Bill No. 27 of 1961) be taken into consideration."

The motion was put and carried and the Bill was taken into consideration.

### *Clause 2*

DEPUTY SPEAKER : The question is—

"That clause 2 do stand part of the Bill".

SRI M. KALYANASUNDARAM : Sir, I move the following amendments :—

For sub-clause (1) *substitute* the following :—

"(1) 'agricultural labourer' means a person who earns his livelihood either wholly or in part by manual labour on agricultural land;

*Delete* item (ii) of sub-clause (2)."

The amendments were duly seconded.

SRI R. SRINIVASA IYER : Sir, we shall take up all amendments relating to clause 2. All amendments can be moved and taken up together. One of my amendments and an amendment of the Hon. Minister relate to sub-clause (6). So all amendments can be taken up together.

I move the following amendments standing in my name :—

In sub-clause (2) (*g*), *after* the words " livestock breeding ", *add* the word " **and** ".

In sub-clause (2) (*a*), *omit* the word " and " *after* the words " growing of trees ".

In sub-clause (2), item (i), *omit* the following " (i) includes any land . . . and tope ".

In sub-clause (2), item (ii), *omit* the brackets and figure " (ii) ".

In sub-clause (6), line 7, *for* the word " any " *substitute* the word " the ".

In sub-clause (6), lines 8–10, *for* the words " such other area adjacent to the dwelling house as may be necessary for the convenient enjoyment of such dwelling house ", *substitute* the words " such other land adjacent to the dwelling house as may be specified by the authorized officer as required for the convenient enjoyment of such dwelling house ",

or the following

" such other land adjacent to the dwelling house which is in his enjoyment as being necessary for the convenient enjoyment of the dwelling house ".

In sub-clause (7), *for* the words and punctuations " and includes his heirs, assignees, legal representatives or persons deriving rights through him ", *substitute* the words " and includes his heirs and legal representatives ".

The amendments were duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendment :—

" In sub-clause (2), *omit* item (ii)."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move the following amendment :—

At the end of sub-clause (3). *add* the following words " wholly or in part ".

The amendment was duly seconded.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendments :—

In sub-clause (6), *for* the words " dwelling house " in the three places where they occur, *substitute* the words " dwelling house or hut ".

*Add* the following explanation to sub-clause (6) :—

" *Explanation.*—It shall be presumed that any person occupying a kudiyiruppu is an agricultural labourer or agriculturist until the contrary is proved."

31st August 1961]

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

* SRI R. SRINIVASA IYER : Sir, taking my first four amendments I may state that I seek to amend sub-clause (2) of clause 2 relating to definition of agricultural land. Agricultural land is defined to mean any land used for any of the following purposes, viz., (*a*) to (*h*). I need not read here sub-clauses 2 (*a*) to 2 (*h*). I want the word " and " after sub-clause 2 (*h*), viz., " growing of trees " to be omitted. I also want to add the word " and " after the words " livestock breeding " in sub-clause (2) (*g*). There are two ' i 's. I do not know why they are so numbered. Growing of trees should not include any land used for any purpose subservient to the above purposes, any forest land, pasture, plantation, orchard and tope. Such a definition of sub-clause (2) (*h*) will not read well. Any of the above purposes will mean, horticulture, grazing, raising of manure crops, dairy farming, etc. My object in moving my amendment to sub-clause (2) of clause 2 is that if the land is used as forest land, pasture land, plantation, orchard and tope, it should not be considered as " agricultural land ".

THE HON. SRI C. SUBRAMANIAM : There are no two ' i 's. They are (i) and (ii). They do not form part of (*a*) to (*h*). They go with the sub-clause. Agricultural land includes etc., but does not include etc. That is all what is stated in (i) and (ii).

* SRI R. SRINIVASA IYER : If that be so, if agriculturist means a person who cultivates agricultural land, I beg to submit that he does not cultivate forest land, pasture land or plantation or tope. This is a Bill to protect the agricultural labourer or agriculturist living in a site which does not belong to him. While it is agreed that he must be protected, I beg to submit that so far as pasture land, plantation, orchard or tope is concerned, it need not be there. For he has to earn his livelihood by his own manual labour or manual labour of members of his family. A watchman in a tope, who is there only for the purpose of watching and who will not be actually cultivating the land or doing any manual labour cannot be considered as an agriculturist. It is only for that purpose I have moved my first four amendments.

*Definition* (6) " *Kudiyiruppu* ".—It means ' the site of *any* dwelling house occupied, either as tenant or as licensee, by any agriculturists or agricultural labourers and includes such other areas adjacent to the dwelling house as may be necessary for the convenient enjoyment of such dwelling house '. 11-00 a.m.

I have stated in my amendment that the word ' any ' should be substituted by the word ' the '. I have also discussed already during the general discussion on the Bill that we must limit that area and the Hon. Minister said that it will not be the entire area of tope area. I requested that it should not be left in a nebulous

state. As regards the point about any dispute in the land pointed out by hon. Member Sri M. Kalyanasundaram, I have given notice of the following amendment :—

'*For* the words " such other area adjacent to the dwelling house as may be necessary for the convenient enjoyment of such dwelling house ", *substitute* the words " such other land adjacent to the dwelling house as may be specified by the authorized officer as required for the convenient enjoyment of such dwelling house "

or

" such other land adjacent to the dwelling house which is in his enjoyment as being necessary for the convenient enjoyment of the dwelling house ".

The word ' hut ' after the words ' dwelling house ' as proposed by the Hon. Minister may also be included for the convenient enjoyment of such a dwelling house. The Hon. Minister said that how to fix the extent of the adjacent area and other details could be provided in the rules.

With regard to my amendment to sub-clause (7), I want to state that a tenant means any person who has paid or agreed to pay rent or other consideration for being allowed to enjoy the land of the latter under tenancy, express or implied and includes his heirs, assignees, . . . I do not know whether he is a tenant or cultivating tenant, agricultural labourer or an agriculturist who is residing in the land. I do not know what is meant by 'any person'. The word is not pertinent in that clause. Persons deriving right from whom? We have got legal representatives or heirs. If we allow him to sell away, that man will substitute some person to live in that house and that man will be deriving the right to sell, assign, etc. Therefore, I say that it may not be proper and I want to include his heirs and legal representatives. I request that my amendments may be accepted.

For sub-clause (6), hon. Member Sri M. Kalyanasundaram has given notice of an amendment to substitute a new sub-clause. In that he wants to add the following words ' shall include any other area as may by custom, or usage be regarded as appurtenant to the dwelling place ". The phraseology used is not correct. How can you enjoy some other area? For enjoying some other area we have to bring in another Bill and pass it for the purpose. I do not know what sort of land could be brought in there. I suppose that man includes any man functioning in the kudiyiruppu. Teherefore, I suggest that the authorized officer or a gazetted officer should be empowered to fix the extent of the adjacent area of a kudiyiruppu for the enjoyment of the occupant. In the circumstances, I oppose the amendment given notice of by hon. Member Sri M. Kalyanasundaram.

**SRI S. M. ANNAMALAI** : ஸார், நான் கொடுத்திருக்கின்ற திருத்தத்தில் இந்தப் பிரிவை எடுத்துவிட வேண்டும் என்று சொல்லியிருக்கிறேன். இந்தப்பிரிவில் does not include house site or land used exclusively for non-agricultural purposes என்றிருக்கிறது. அதாவது கிராம நத்தங்களில் கூட

31st August 1961] [Sri S. M. Annamalai]

பலர் பயிர் வைத்துக்கொண்டிருக்கிறார்கள் ஆனால் அடங்கல் சிட்டாவில் பார்த்தால் பயிர் வைத்திருக்கிறார்கள் என்று இருக்காது, நத்தங்கள் என்று தான் இருக்கும். இப்போது இருக்கக்கூடிய சப்-கிளாஸை பார்த்தால் இதில் பயிர் செய்கின்றவர்களை வெளியேற்றக்கூடியவகையில் அமைத் திருக்கிறது, ஆகவே சப்-கிளாஸை நீக்கிவிட வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM: ஸார், அமைச்சர் அவர்கள் இந்த பிரிவுக்குக் கொடுத்திருக்கக்கூடிய திருத்தங்கள், நான் கொடுத்திருக் கும் திருத்தங்களின் நோக்கத்தைப்பூர்த்தி செய்வதாகவே அமைந்திருக் கிறது. குடியிருப்பு என்பதை நான் பிரேரேபிக்கவில்லை. குடியிருப்புக்கு அமைச்சர் அவர்கள் இப்போது கொடுத்திருப்பதானது குடியிருப்பில் குடி யிருக்கக்கூடியவர்கள் விவசாயத் தொழிலாளர்களாக கருதப்படுவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு இருக்கின்றவர்கள் விவசாயத் தொழிலாளர்கள் அல்ல என்று நிரூபிக்க வேண்டிய பொறுப்பு நிலச் சொந்தக்காரர்களுக்குத்தான், அல்லது, அப்படியல்ல என்று யார் சொல்லு கிறார்களோ அவர்கள்தான் நிரூபிக்கவேண்டும் என்று இருக்கிறது. இது ஓரளவுக்கு என்னுடைய முதலாவது திருத்தத்தை ஒத்ததாக இருக்கிறது. அக்ரிகல்சர் லேபர் என்பதற்கு இது வியாக்கியானமாக அமையும் என்று எண்ணுகிறேன். இரண்டாவது நான் கொடுத்திருக்கும் திருத்தத்தைப் பொருத்த அளவில், அமைச்சர் அவர்களும் இப்போது ட்வல் ஹௌஸ்லிங் அல்லது ஹட் என்று திருத்தம் கொடுத்திருக்கிறார்கள். இதுவும் என்னு டைய திருத்தத்திற்கு அவசியமில்லாத முறையிலேயே அமைந்திருக்கிறது. ஆகவே அமைச்சர் அவர்களுடைய திருத்தங்களையே நான் ஆதரிக்கலாம் என்று கருதுகிறேன். கனம் ஸ்ரீநிவாச அய்யர் அவர்கள் கொடுத்திருக்கும் திருத்தங்கள் ஒன்றையும் ஏற்றுக் கொள்ளக்கூடாது என்பது என்னுடைய வேண்டுகோள். வேண்டுமானால், 'அஸைனிஸ்' பற்றி அவர்கள் கொடுத் திருக்கும் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளலாம் என்பதை தெரிவித்துக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU: The idea of protection here is that anyone who is working on the agricultural land or other ancillary or any work connected with the agriculture are to be protected. We have mentioned that all these people are to be protected. We have the same provision in the Madras Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960. Here we have mentioned the purposes from (a) to (h) and so someone or other will come under lands mentioned here. I consider that the words 'any land' are necessary. There will be no difficulty in understanding it.

As regards the amendment that in sub-clause (6) in line 7, *for* the word 'any', *substitute* the word 'the', I say in legal pariance it is ordinarily used. There is no difficulty about it and especially when you say 'any' and then 'such other area' there is no difference in the meaning. Therefore, this word 'any' could be there as it is.

As regards Sri R. Srinivasa Iyer's amendment to sub-clause (7), I accept it, i.e., for the words and punctuations—

"and includes his heirs, assignees, legal representatives or persons deriving rights through him", substitute the words "and includes his heirs and legal representatives".

Now I think the clause will be all right.

The amendments of Sri R. Srinivasa Iyer except the amendment to sub-clause **(7)** and the amendments of Sri M. Kalyanasundaram, Sri S. M. Annamalai and Sri N. K. Palanisami were by leave withdrawn.

The Government amendments were put and carried.

The amendment of Sri R. Srinivasa Iyer to sub-clause **(7)** was put and carried.

Clause 2, as amended, was put and carried.

SRI S. NAGARAJA MONIGAR : Sir, I wanted to speak on clause 2 before its being put to vote.

DEPUTY SPEAKER : The hon. Member should have spoken on that clause before I put it to vote. When I was putting that clause, nobody had a right to speak just at that time.

*Clause* 3.

DEPUTY SPEAKER : The question is—

"That clause 3 do stand part of the Bill."

SRI M. KALYANASUNDARAM : Sir, I move the following amendments standing in my name :—

"In sub-clause (1), delete the words and letters 'on the 31st March 1959'."

"*For* sub-clause (2), *substitute* the following :—

'(2) Subject to the provisions of sub-section (3) any person occupying any kudiyiruppu shall be entitled to continue to occupy the kudiyiruppu on the same terms and conditions as were applicable to him on the 31st March 1959.' "

SRI N. K. PALANISAMI : I second the amendments, Sir. I move the following amendment standing in my name :—

"In sub-clause 3 (*a*), *after* the words 'if he has done' and 'guilty of any', *add* the words 'wilfully' and 'wilful' respectively"."

SRI M. KALYANASUNDARAM : I second the amendment, Sir.

SRI R. SRINIVASA IYER : Sir, I move the following amendments standing in my name :—

"In sub-clause (3) (*b*), *after* the word 'kudiyiruppu', *for* 'full-stop', *substitute* 'semi-colon' and *add* the word 'or' after the 'semi-colon' so inserted.

31st August 1961] [Sri R. Srinivasa Iyer]

" In sub-clause (3) (*b*), *after* the Explanation, *add* the following as (*c*)—

" (*c*) **if he is a servant or watchman** employed to guard a tope, garden, plantation or orchard of the owner of the ' Kudiyiruppu ' and resides in the dwelling house in the tope, garden, plantation or orchard for that purpose."

The amendments were duly seconded.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move the following amendment standing in my name :—

" *For* sub-clause (3) (*a*), *substitute* the following :—

' (3) (*a*) if he has done any act or has been guilty of any negligence which is totally destructive of, or permanently injurious to the kudiyiruppu; or '."

SRI N. K. PALANISAMI : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI M. KALYANASUNDARAM : உதவி சபாநாயகர் அவர்களே, மூன்ருவது பிரிவிலே கொடுக்கக் கூடிய பாதுகாப்பு, குடியிருப்பில் அனுபவித்து வரும் விவசாயிகளோ அல்லது விவசாயத் தொழிலாளர்களோ வெளியேற்றப்படக் கூடாது என்பது. இந்தப் பாதுகாப்பு 1959-ம் வருஷம், மார்ச் மாதம், 31-ம் தேதிக்கு முன்பு குடியேறியவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. அந்தத் தேதியில் என்ன நிபந்தனையில் குடியிருப்பை அனுபவித்து வந்தார்களோ அந்த நிபந்தனையுடன் இருக்க உரிமை உண்டு என்று சொல்லப்பட்டிருக்கிறது. நான் கொடுத்திருக்கும் திருத்தம் இந்த மார்ச் 31, 1959 என்பதை எடுத்து விடவேண்டும் என்பது. இனி குடியிருப்பில் குடியேறுகின்றவர்களுக்கும் பாதுகாப்பு எற்படும் என்பது எனது திருத்தத்தின் அர்த்தம். எதிர் காலத்திற்கு அப்பேற்பட்ட பாதுகாப்பு காலவரையில்லாமல் கொடுக்கக் கூடாது என்று இருக்குமானல், சமீப கால தேதியையாவது சேர்க்கவேண்டும் என்பது எனது அபிப்பிராயம். இந்தச் சட்டம் அமுலாகும் தேதியையாவது போட்டால் வரவேற்கத் தக்கதாக இருக்கும். அல்லது லாண்ட் ஸீலிங் பில் வெளியிடப்பட்ட தேதியையாவது கொடுப்பது அவசியம் என்று நான் கருதுகிறேன். அதற்காக மார்ச் 31, 1959 என்பதை எடுத்துவிடவேண்டுமென்று கொடுத்திருக்கிறேன். இந்தச் சட்டம் நிறைவேற்றப்படும் தேதி என்று குறிப்பிடவேண்டும். அல்லது லாண்ட் ஸீலிங் பில் பிரேரேபிக்கப்பட்ட தேதி என்ருவது குறிப்பிடவேண்டுமென்று நான் கருதுகிறேன். இதுதான் லாண்ட் ஸீலிங் பில்லில் இருந்தது என்பது என்னுடைய அபிப்பிராயம்.

என்னுடைய இரண்டாவது திருத்தம் நிபந்தனைகள் சம்பந்தப்பட்ட வரையில் புதிதாக எந்த நிபந்தனையையும் எற்றுக்கொள்ளாமல் மார்ச் 31, 1959-ல் இருந்த நிபந்தனையின் பேரில் இருந்துகொண்டு அனுபவிக்கவேண்டும். குடியிருப்பு சொந்தக்காரனும் மாற்றக் கூடாது, குடியானவனும் மாற்றக் கூடாது. 1959, மார்ச் 31-ல் இருந்த நிபந்தனைகள் என்று தெளிவாக்கப்படவேண்டும். இதைத்தான் எனது இரண்டாவது திருத்தத்தில் சொல்லியிருக்கிறேன்.

மூன்ருவதாக, வெளியேற்றுவதற்குள்ள காரணங்கள் மிகவும் பொதுப் படையாக இருக்கின்றன. எந்தக் காரணத்தை வேண்டுமானலும் காட்டி வெளியேற்றிவிடலாம். ஒரு எருக்குழி பறித்தால் கூட, நஷ்டம் எற்படக் கூடிய காரியத்தைச் செய்தான் என்ற குற்றம் எற்படும். அவர்களுக்கு பாதுகாப்பு இருக்கவேண்டும் என்று 15-வது திருத்தத்தைப் பிரேரேபித்

திருக்கிறேன். இடத்திற்கு ஆபத்து ஏற்படக் கூடிய, அதாவது "டோட்டலி டிஸ்ட்ரக்டிவ்" என்று இருந்தால் ஓரளவு பாதுகாப்பு ஏற்படும். சின்னப் பிரச்னைகளினால் தகராறு ஏற்படக் கூடாது என்பதற்காக "பர்மனண்ட்லி இன்ஜூரியஸ்", அதாவது நிரந்தரமான சேதத்தை உண்டாக்கினால் தான்; உபயோகப்படுத்த முடியாத அளவுக்கு பாதகத்தைச் செய்தால்தான் வெளியேற்றலாம் என்ற மாதிரி இருக்கவேண்டும். யாரும் தான் இருக்கும் கட்டிடத்திற்குத் தீ வைத்துக் கொள்ளமாட்டார்கள், வயலாக இருந்தாலும், தோப்பாக இருந்தாலும் இருக்ககூடிய மரங்களை வெட்டமுடியாது செய்யவேண்டும் என்று எதிர்பார்க்கலாம். தோப்பு நிலத்தை அல்ல இது குறிப்பிடுவது—குடியிருப்பு நிலத்தை தான் குறிப்பிடுகிறது. இப்போது இருக்கும் முறையில் வேண்டுமென்றே குடியிருப்பு சொந்தக்காரர்கள் தொந்தரவு கொடுக்க சந்தர்ப்பங்களைப் பயன் படுத்தக்கொண்டு, ஒரு எருக்குழி வெட்டினாலும் சேதத்தை விளைவித்தார்கள் என்று ஆர்.டி.ஓ-விற்கு மனுப்போட்டு தொந்தரவு கொடுக்க சந்தர்ப்பம் ஏற்படுகிறது என்ற காரணத்தனால் மூன்றாவது திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இந்தத் திருத்தங்களைப்பற்றி ஆலோசிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

Sri N. K. PALANISAMI: உதவி சபாநாயகர் அவர்களே, இப்போது "நெக்லிஜென்ஸ்" என்று இருக்கக் கூடிய முறையில் தெரியாத்தனமாக ஏதாவது செய்துவிட்டாலும் அவர்களை வெளியேற்றக் கூடிய சந்தர்ப்பம் இருக்கிறது. இப்போது கல்டிவேட்டிங் டெனென்ட்ஸ் ப்ரொட்டெக்ஷன் ஆக்ட்டில் மூன்றாவது பிரிவில் "நெக்லிஜென்ஸ்" என்று இருக்கிறது. அதை வைத்து அதிகமான வெளியேற்றம் இருக்கின்றது. அதற்காக வேண்டுமென்றே கெடுதல் செய்தால் மட்டும் வெளியேற்ற வேண்டும் என்பதற்காக "வில்ஃபுல்" என்ற வார்த்தையைச் சேர்க்கவேண்டுமென்று நான் திருத்தம் கொடுத்திருக்கிறேன்.

* Sri R. SRINIVASA IYER: Sir, so far as this date 31st March 1959 is concerned, I desire to state that that date was agreed to at the time the matter was considered by the Land Ceiling Joint Select Committee, that is, tenants who were there on the 31st March 1959, should be protected. Then again the first two amendments moved by the hon. Member Sri Kalyanasundaram will not work properly. He wants that people who have been inducted into the land subsequent to that date should be given protection. I do not see how they will be governed by the terms of agreement of 1959 since they come on the scene later.

Suppose a person is put into the land in 1960. He comes newly and how will he be governed by the same conditions and terms as were applicable to him as on 31st March 1959. He was not in existence on that date. There was no agreement on that date. He is inducted newly. We have been having certain dates for certain things. For ceiling on land we have 6th April 1960 and for abolition of estates 1st July 1945 when our policy was announced. Therefore, here also 31st March 1959 was the date fixed for the purpose of giving protection.

There is one other important thing. This Bill gives protection to a person who has been evicted after 31st March 1959 and he can file an application for restoring his possession. I do not know how the amendment suggested by the hon. Member will work in practice. A person who has been evicted after 31st March 1959 will also be entitled to apply to the proper officer for the restoration of possession.

31st August 1961] [Sri R. Srinivasa Iyer]

My first amendment says—

"In sub-clause (3) (*b*), after the word 'kudiyiruppu' *for* 'full stop', *substitute* 'semi-colon' and *add* the word 'or' after the 'semi-colon' so inserted."

My next amendment says—

"In sub-clause (3) (*b*), *after* the Explanation, *add* the following as (*c*) :—

'(*c*) if he is a servant or watchman employed to guard a tope, garden, plantation or orchard of the owner of the 'kudiyiruppu' and resides in the dwelling house in the tope, garden, plantation or orchard for that purpose'."

In the case of a coconut tope, usually a watchman has got to be there. Otherwise, theft of coconuts would occur. His house must be there. But he is not an agricultural labourer and he may be employed for cultivating any other land. What I want to suggest is that just as we have excluded plantations, tope and other things from the Land Ceiling Bill, the person living in the midst of a coconut tope also must be excluded from the operation of this clause. That is why I want to add a new sub-clause (*c*) in my amendment. After all the owner of the 'tope' must be entitled to change his watchman if he allows theft or if he himself steals If such a right is not given to him, he cannot evict him and the tope will practically be no tope and possibly there will be no coconut. We must not allow him to squander the property of the owner of the 'kudiyiruppu' for the sin of having engaged him as a watchman. That is why I have moved Amendment No. 14 as an exception to the general rule and Amendment No. 13 is a consequential amendment to that, suggesting that 'full stop' must be converted into 'semi-colon' and it relates to a grammatical term. That is all I want to say.

**Sri A. GOVINDASAMY** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 3-வது ஷரத்தில் குறிப்பிட்டிருக்கிறபடி 1959-ம் வருடம் மார்ச்சு மாதம் 31-ந் தேதி என்ற தேதியை குறைந்தது 1960-ம் வருடம் எப்ரல் மாதம் 6-ந் தேதி என்றாவது திருத்திக்கொள்ளவேண்டும் என்று கனம் அங்கத்தினரான கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னதை நான் ஆதரிக்கிறேன். ஏன் அந்தத் தேதியை நான் வலியுறுத்துகிறேன் என்றால் அந்த தேதியில்தான் நில உச்ச வரம்பு மசோதா கொண்டுவரப்பட்டதாலும், அந்தத் தேதியிலிருந்துதான் அது அமுலுக்கு வரும் என்று குறிப்பிட்டிருக்கிற காரணத்தினாலும், எற்கனவே குடியிருப்பு பற்றிய ஷரத்துக்களை உச்ச வரம்பு மசோதாவிலேயே சேர்க்கப்பட்டிருந்ததாலும், இபபொழுது அது ஒரு தனி மசோதாவாக கொண்டுவரப்படுவதாலும், அந்தத் தேதியிலிருந்தாவது என்று இதைத் திருத்திக்கொள்ளவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதுமாத்திரமல்ல. 3-வது உபபிரிவிலே, எ பிரிவில் குறிப்பிடப் பட்டிருக்கிற நிபந்தனையில் எதாவது குடியிருப்பு மனையில் இருக்கிற மரத்தை வெட்டினாலோ, அல்லது வேலி போடுவதற்கு குழி தோண்டினாலோ இம்மாதிரி எதாவது ஒரு சிறிய தவறு செய்துவிட்டாலும்கூட, மிராசுதார் குடிகளை வெளியேற்றலாம் என்று சொல்லுவதற்கு அந்த நிபந்தனை இடம் கொடுக்கலாம் என்ற காரணத்தினால், அந்த நிபந்

தனையை எடுத்துவிடவேண்டும் என்பதுதான் என்னுடைய வேண்டுகோள் என்பதையும் தெரிவித்துக்கொண்டு, இதன் மூலம் குடியிருப்புகளுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

* **SRI V. K. RAMASWAMY MUDALIYAR** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் சீனுவாசய்யர் கொண்டுவந்த திருத்தத்தை ஆதரிக்கிறேன். தோப்பில் அம்மாதிரி தோப்பு சொந்தக்காரர்கள் வீடுகள் கட்டி அதில் 'வாட்ச்மென்' வைப்பது வழக்கம். குடியிருப்பு பாதுகாப்பு சட்டம் இதற்கும் 'அப்ளிகபிளாக' இருக்குமா என்பதைப் பார்க்கவேண்டும். அப்படியிருந்தால் கொஞ்சம் பாதகமாக இருக்கும். ஏனென்றால் அடிக்கடி காவலாளர்களை மாற்றவேண்டிய பிரமயங்கள், ஹேஷ்யங்கள் நேரலாம். அமைச்சர் அவர்கள் இதைப் பற்றி விளக்கம் கொடுத்து, அதற்கு எந்தவிதமாக செய்யப்போகிறார்கள் என்பதைச் சொல்லவேண்டும். அப்படியிருந்தால் இது தோட்டத்து சொந்தக்காரர்களுக்கு பாதகமாக இருக்கும். ஆதலால், அமைச்சர் அவர்கள் இதற்கு சரிவர விளக்கம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**SRI M. KALYANASUNDARAM** : Sir, by way of explanation I want to add a few words before the Hon. Minister replies.

**DEPUTY SPEAKER** : The hon. Member has already spoken.

**SRI R. SRINIVASA IYER** : Sir, other hon. Members also must be given the right of reply.

**DEPUTY SPEAKER** : He has no right of reply.

**SRI M. KALYANASUNDARAM** : I know that I have no right of reply but I want to make a personal explanation.

1959-லே அன்றையதினம் என்ன நிபந்தனை இருந்ததோ அதுவே இருக்கலாம் என்றுதான் சொன்னேனே தவிர, வேறு ஒன்றும் அதில் முரண்பாடு இல்லை. முன்னாலே குடியிருந்தவர்களுக்கு அந்த நிபந்தனை. அதற்குப் பின்னாலே குடியிருந்தவர்களுக்கு அவர்கள் எந்த நிபந்தனையின் பேரில் குடிபுகுந்தார்களோ அந்த நிபந்தனை இதில் வேறு ஒன்றும் இல்லை.

தென்னந் தோப்புகளில் குடியிருப்பு என்பது சொந்தக்காரர்கள் காவலாட்கள் இருப்பதற்காக குடிசைகள் போட்டுக் கொடுப்பது. அவைகள் அந்த குடியிருப்பு என்ற வியாக்கியானத்தின்கீழ் வராது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

11-30 a.m. **THE HON. SRI M. A. MANICKAVELU** : Sir, I do not understand how the amendment moved by the hon. Member suggesting the deletion of the words and letters "on the 31st March 1959" would help him. As the hon. Member, Sri Srinivasa Iyer, has pointed out, suppose a person has been evicted on 31st March 1959. Now there is scope for him to apply and get back his possession. If we put a later date it will be applicable to persons who will apply on that date and later on. I think, therefore, it is better to have that date itself.

Now I hope the House will accept a small amendment to sub-clause 3 (*a*).

I don't understand the object of the other amendment regarding putting of a semi-colon and all that.

31st August 1961]

SRI R. SRINIVASA IYER : சர்குலேட் பண்ணியதில் தப்பு; கனம் அங்கத்தினர் ஸ்ரீ கல்யாணசுந்தரம் கூட சொன்னார்கள், அது இதற்கு அப்ளையாகாது என்று.

THE HON. SRI C. SUBRAMANIAM : That does not matter.

SRI R. SRINIVASA IYER : I am not pressing my amendments.

SRI M. KALYANASUNDARAM : I am withdrawing my amendment relating to sub-clause 3 (*a*) and pressing my other two amendments.

The amendment of Sri M. Kalyanasundaram to sub-clause (3) (*a*) was, by leave, withdrawn.

The other amendments of Sri M. Kalyanasundaram were put and lost.

The amendments of Sri N. K. Palanisami and Sri R. Srinivasa Iyer were, by leave, withdrawn.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment, viz :—

" In sub-clause 3 (*a*) after the words ' injurious to ' add the words ' the property belonging to the owner of '."

The amendment was put and carried.

Clause 3 as amended was put and carried.

*Clause 4.*

DEPUTY SPEAKER : The question is—

" That clause 4 do stand part of the Bill."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

Omit the words " or the major part thereof ".

The amendment was put and carried.

Clause 4 as amended was put and carried.

*Clause 5.*

DEPUTY SPEAKER : The question is—

" That clause 5 do stand part of the Bill."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment, viz. :—

In the clause, in line 22, omit the words " for the major part thereof ".

SRI R. SRINIVASA IYER : Sir, I move—

" In the clause, in line 18, *for* the words, figures and brackets " in sub-section (3) ", *substitute* the words, letters and brackets ' in sub-clauses (*a*) and (*b*) of sub-section (3).' "

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

* SRI R. SRINIVASA IYER : My amendment only seeks to rectify a clerical omission. Any owner of a kudiyiruppu seeking to evict for any of the reasons mentioned in sub-section (3) of section 3, etc., is what is stated here. " Reasons " means reasons for eviction. Sub-clauses (*a*) and (*b*) of sub-section (3) are the only reasons. That is why my amendment has been moved. If the Government think that those words need not be added, then it is all right.

THE HON. SRI C. SUBRAMANIAM : The reasons are there.

SRI R. SRINIVASA IYER : My amendment is not out of order in any way.

THE HON. SRI M. A. MANICKAVELU : There is no need for such an amendment.

The amendment of Sri R. Srinivasa Iyer was by leave withdrawn.

The Government amendment was put and carried.

Clause 5, as amended, was put and carried.

*Clause* 6.

DEPUTY SPEAKER : The question is—

" That clause 6 do stand part of the Bill."

SRI S. M. ANNAMALAI : Sir, I move the following amendment :—

At the end of the clause, *add* the following " within a month ".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : ஸார், நான் கொடுத்திருக்கும் திருத்தத்தின் நோக்கம், உத்தரவு பிறப்பிப்பதில் ஒரு டைம் லிமிட் வேண்டும் என்பதுதான். அப்படி இல்லாவிட்டால், உத்தரவைப் பெற அதிக நாள் ஆகும். அதாவது, அதை அலௌ செய்தார்களா அல்லது தள்ளி விட்டார்களா என்பதற்கான உத்தரவை மனுதார்கள் ஒரு மாதத்திற்குள்ளாகப்பெறச் செய்வது சௌகரியமாக இருக்கும். உத்தரவை பிறப்பித்து விட்டாலும், அதை அனுப்பி அவர்கள் கைக்கு வந்து சேர பல மாதங்கள் ஆகிவிடுகின்றன. ஆகவே அதற்கு ஒரு லிமிட் போட வேண்டும். என் தீர்மானத்தை எற்றுக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : As a working principle, it could be borne in mind. But to put it statutorily, it is not possible. The hon. Member may kindly withdraw that amendment.

31st August 1961]

SRI S. M. ANNAMALAI : I am pressing it, Sir.

The amendment was put and lost.

Clause 6 was put and carried.

*Clause* 7.

DEPUTY SPEAKER : The question is—

" That clause 7 do stand part of the Bill."

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move the following amendment :—

In sub-clause (1) *for* the word " thirty ", *substitute* the word " sixty ".

SRI M. KALYANASUNDARAM : I move the following amendment, viz :—

" In the Explanation to sub-clause (1), *for* the words ' communicated to ', *substitute* the words ' received by '."

The amendment was duly seconded.

SRI S. M. ANNAMALAI : Sir, I move my amendment which is as follows :—

" In the Explanation to sub-clause (1), *for* the words ' communicated to ', *substitute* the words ' received by '."

**The amendment was duly seconded.**

DEPUTY SPEAKER : The clause and the amendments are before the House for discussion.

SRI M. KALYANASUNDARAM : ஸார், 60 நாட்கள் கொடுக்க வேண்டும் என்று செய்வது சரி. அந்த 60 நாட்களும் உத்தரவு பெறப்பட்ட தேதியிலிருந்து இருக்கவேண்டும் என்பது என் திருத்தம். திருத்தத்தின் நோக்கம், உத்தரவை அனுப்பிவிட்டேன் என்றால் மட்டும் அது சரியாகாது. உத்தரவைப் பெறாமல் இருந்தால் அது சரியில்லை. எப்படி அது அனுப்பப் பட்டது, இந்த முறையில் அது போய்ச் சேர்ந்தது என்றெல்லாம் ஒன்றுமில்லை. ஆர். டி. ஓ. ஆபீசிலிருந்து அனுப்பியாகி விட்டது என்றாலும், அந்த விஷயமே தெரியாமல், இருந்தால், அதனால் கால தாமதம் ஏற்படும். அதற்கு பார்ட்டி பொருப்பு அல்ல. ஆகவே தான் அதைத் திருத்தி, பெறப் பட்ட தேதி என்று போட்டால் நலமாக இருக்கும். அனுப்பிய தேதி என்றில்லாமல், அனுப்பியதற்கு உத்தர வாதமாவது வேண்டும் என்று இருந்தால், என் திருத்தத்திற்கு அவசியம் இருக்காது.

THE HON. SRI C. SUBRAMANIAM : The manner of communicating the order can be provided for in the rules under clause 14 (2) (*b*).

SRI M. KALYANASUNDARAM : அப்படியானால் சரி என் திருத்தம் வேண்டியதில்லை.

SRIMATHI T. N. ANANDANAYAKI : The hon. Member, Sri M. Kalyanasundaram, mentioned that it would be better to have ' the date of receipt of the order ' instead of ' the date of communication of the order '. Usually an order despatched from an office

do not reach the party in time. At times the party may not be available. If we take into account the date of receipt of the order, it would be convenient to count the period and it would be also convenient to the parties. Therefore, I suggest that 'the date of receipt of order' should be taken into account instead of 'date of commuication of the order'. I know the Hon. Minister would be kind enough to accept this suggestion.

* SRI R. SRINIVASA IYER : Sir, sub-section (2) of section 14 says—

(2) In particular and without prejudice in the generality of the foregoing power, such rules may provide for—

(*a*) the form of application to be made to the authorized officer under section 4 or section 5;

(*b*) the manner of communicating to the parties a copy of the order under section 6 or under sub-section (4) of section 7.

Sir, this Government may make rules to carry out that point under section 14 (2) (*b*). The mode of communication should be by Registered Post Acknowledgement Due. In this connection, sections 12 and 14 of the Indian Limitation Act have also to be taken into account for the purpose of this Bill. The limitation time has been extended from 30 to 60 days according to the Government amendment. This increase of period should be noted not only in the Registered Post Acknowledgment Due letter but also in the office Notice Board of the authorized officer as the parties will always be going to the office and looking at the Notice Board.

* THE HON. SRI M. A. MANICKAVELU : The order of communication to the party and not the copy of the order that goes out. It is not sent leisurely. Therefore, the despatch of the communication of the order and not the receipt of the order by party could be taken into account. I do not think all communications could be sent by registered post. In a regular office there is a despatch register maintained to send all communications and entries are made. We must rely on that. It is more reliable than that of an individual saying that he has not received. We cannot depend on his statement. We have also provided as to the manner in which the communication is to be communicated. It means 'the date on which the order is communicated to the party conderned' and the words 'a ropy of' may be omitted.

DEPUTY SPEAKER : The Hon. Minister may move his amendment.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

'In the Explanation to clause 7 (1), *omit* the words "a copy of" after the words "on which".'

The Government amendments were put and carried.

31st August 1961]

The other amendments were, by leave, withdrawn.

Clause 7 as amended was put and carried.

Clauses 8 to 13 were put and carried.

*Clause* 14.

DEPUTY SPEAKER: The question is—

'That clause 14 do stand part of the Bill.'

SRI M. KALYANASUNDARAM: Sir, I move—

After sub-clause (2) (*c*), *add* the following as a new sub-clause (*d*)—

"(*d*) procedure for the summary enquiry under clause 6".

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER: The clause and the amendment are before the House for discussion.

SRI M. KALYANASUNDARAM: நான் கொடுத்திருக்கும் திருத்தத்தை அமைச்சர் அவர்கள் ஒப்புக் கொண்டு விட்டார்கள். இன்னொரு விஷயத்தை சேர்க்க வேண்டுமென்று இப்பொழுது ஏற்பட்ட நிலைமையின் விளைவாக சொல்லுகிறேன். இரண்டாவது பிரிவிலே குடியிருப்பை சுற்றியிருக்கக்கூடிய பகுதியைப்பற்றி விதிகளிலே தெளிவுபடுத்தப்படும் என்று கூறப்பட்டிருக்கிறது. இந்தப் பிரிவிலே நான் இப்பொழுது சொல்லுவதையும் சேர்த்துக் கொள்வது நலமாக இருக்கும். டெபனிஷன் கிளாஸிலே சொல்லப்பட்டிருக்கும் குடியிருப்பு உரிமையை சரியான முறையிலே அனுபவிப்பதற்கு வேண்டிய பக்கத்து உரிமை என்னென்ன என்பதை இந்த பிரிவிலேயே சேர்க்க வேண்டுமென்ற யோசனையைக் கூறிக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move—

(i) After item (*a*), *insert* the following item:—

"(*b*) the manner of holding summary enquiry under section 6;";

"(ii) re-letter items (*b*) and (*c*) as items (*c*) and (*d*) respectively".

I think it is identical to the amendment moved by Sri M. Kalyanasundaram.

THE HON. SRI C. SUBRAMANIAM: I suggest that a formal amendment may be moved for deleting the words 'a copy of' occurring in sub-clause (2) (*b*) of clause 14.

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I formally move—

"In sub-clause (2) (*b*) of clause 14, *omit* the words 'a copy of' after the words 'to the parties'."

SRI M. KALYANASUNDARAM: இதிலே ஒரு விஷயம் தெளிவாக இல்லை. ஆர்டரை கம்யூனிகேட் செய்வதற்கும், அதனுடைய பிரதி ஒன்றை கொடுப்பதற்கும் ஸ்டாம்புச் செலவில்லாமலே பெறுவதற்கு உரிமை உண்டு என்று இருக்கிறது . . .

[31st August 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : That can be done.

* SRI R. SRINIVASA IYER : So far as the powers to make rules are concerned sub-clause (1) of clause 14 is a general clause which will enable the Government to make any rule under the Act. As Sri M. Kalyanasundaram pointed out when fixing the area, as to what manner the area adjacent to the dwelling house for the enjoyment of the occupant should be fixed by the authorized officer may be provided in the rules. My amendment to caluse 2 (6) was not accepted and I withdrew it as the Hon. Minister stated that provision in sub-clause (2) is specific. Sri M. Kalyanasundaram also stated that it would not apply to the watchmen of topes or something like that. I think it should be defined and something to that effect should be mentioned in the sub-clause.

* THE HON. SRI M. A. MANICKAVELU : I still wonder whether a specific provision is necessary. Because, in the light of the discussion that has taken place here now, we will apply our mind to the various aspects while framing the rules. Now, various matters have been referred to and various aspects have been mentioned. I have also given my reply to them. While framing the rules, they will apply their mind to every aspect of the matter.

The amendment of Sri M. Kalyanasundaram was, by leave, withdrawn.

The Government amendments were put and carried.

Clause 14, as amended, was put and carried.

*Clause* 1.

DEPUTY SPEAKER : The question is—

"That clause 1 do stand part of the Bill."

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"In sub-clause (3), *for* the word 'three', *substitute* the word 'five'."

The amendment was duly seconded.

The amendment was put and lost.

Clause 1 was put and carried.

The Preamble was put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

"That the Madras Occupants of Kudiyiruppu (Protection from Eviction) Bill, 1961 (L.A. Bill No. 27 of 1961), as amended, be passed."

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Madras Occupants of Kudiyiruppu (Protection from Eviction) Bill, 1961 (L.A. Bill No. 27 of 1961), as amended, be passed."

31st August 1961]

**SRI M. KALYANASUNDARAM :** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நம்முடைய வருவாய் அமைச்சர் அவர்களும், நிதி அமைச்சர் அவர்களும் முயற்சி எடுத்துக்கொண்டு இந்த மசோதாவிற்கு சில நல்ல திருத்தங்களை ஏற்றுக்கொண்டிருக்கிறார்கள். அதற்காக அவர்களுக்கு முதலில் நன்றி தெரிவித்துக்கொள்கிறேன். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும்போது நடைமுறையில் ஏற்படக்கூடிய சில கஷ்டங்களைப் போக்குவதற்குச் சில யோசனைகளைக் கூற விரும்புகிறேன்.

'ஆதரைஸ்டு ஆபீசர்' என்பவர் ரெவின்யு டிவிஷனல் ஆபீசராகத்தான் இருப்பார் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆர்.டி.ஓ. வைத் தவிர வேறொருவரை இதற்குப் போட முடியாது. அதற்குமேல் அப்பீல், கலெக்டருக்கு இருக்கிறது. இந்த இரண்டு பேர்களிடத்திலும் இந்த அதிகாரம் இருக்கவேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன்.—அவர்கள் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் என்ற காரணத்தினாலே. இந்த அதிகாரத்தை நீதி மன்றத்திற்கோ ஜில்லா ஜட்ஜுக்கோ கொடுக்கவேண்டும் என்று நான் திருத்தம் கொடுக்கவில்லை. சட்டத்தை அப்படியே குருட்டுத்தனமாக அர்த்தம் பண்ணாமல், சட்டம் இயற்றியதின் நோக்கம் என்ன என்பதை கருத்தில் கொண்டு, இதை அமுல் நடத்தக்கூடிய சந்தர்ப்பம் கலெக்டர், ஆர்.டி.ஓ. போன்ற நிர்வாக அதிகாரிகளுக்கு இருப்பதால் இதை நான் வரவேற்கிறேன்.

கல்ட்டிவேடிங் டெனன்ட்ஸ் ப்ரொடெக்ஷன் சட்டத்தைப்போல் விட்டு விடாமல், இந்தச் சட்டத்தைப் பொறுத்த வரையில், இதைக் கொண்டு வந்ததன் நோக்கம் முதலியவைகளைக் குறித்து விதிகள் மூலமாகவும் விளக்கங்கள் மூலமாகவும் அதிகாரிகளுக்கு விஷயம் தெரியப்படுத்துவதற்கு நடவடிக்கை எடுக்கவேண்டும். ஏனென்றால், விவசாயத் தொழிலாளிகளையும் விவசாயிகளையும் குடியிருப்பு நிலத்திலிருந்து அப்புறப்படுத்தக் கூடாது என்று நினைக்கிறோம். நம் நாட்டின் விவசாய முன்னேற்றத்திற்காக வேலை செய்யக்கூடிய தொழிலாளிக்கு எட்டடிக் குச்சு கட்டிக்கொள்ளவாவது ஒரு உரிமை இருக்கவேண்டும். உடனடியாக இதைக் கொடுக்க முடியாமலிருக்கலாம். இப்படிக் குடியிருப்பவர்களை அப்புறப்படுத்தினால் விவசாயத்திற்குப் பாதகம் ஏற்படும். அப்படி பாதகம் ஏற்படக்கூடாது என்ற உயர்ந்த நோக்கத்தோடு இயற்றப்படும் சட்டத்தை, இதன் நோக்கம் நிறைவேறும் முறையில் அமுல் நடத்துவது முக்கியம். இந்த வகையில் அதிகாரிகளுக்கு தகுந்த விளக்கம் தரப்படவேண்டும். பஞ்சாயத்துச் சட்டம் வந்தவுடனே கலெக்டர்களைக் கூட்டி வைத்து, அவர்களுக்கு சட்டத்தின் நோக்கம், லட்சியங்கள் எல்லாம் எடுத்துரைக்கப்பட்டன. அதுபோல், கலெக்டர்கள் மாநாட்டில் இதை ஒரு முக்கியப் பிரச்னையாக எடுத்துக்கொண்டு, இந்தச் சட்டத்தை நல்ல முறையில் அமுல் நடத்துமாறு வற்புறுத்தவேண்டும்.

மூன்று வருஷ வாய்தா இருக்கிறது. அதற்குப் பிறகு என்ன என்று யோசிக்கவேண்டும். மூன்று வருஷங்களுக்குள்ளே ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கும் திட்டத்தின்கீழ் பல ஹரிஜனங்களுக்குக் குடியிருப்பு மனை கொடுக்கப்பட்டுவிடும். அதிலேயே எல்லா ஹரிஜனங்களுக்கும் இந்தப் பிரச்னை தீர்ந்துவிடும் என்று நம்ப முடியாது. குடியிருப்பு மனை கொடுக்கவேண்டுமென்றால்கூட, மனை வாங்கிக்கொடுக்க இட வசதி இல்லாமலிருக்கிறது. குடியிருப்பு மனையாக வாங்குவதற்கு சுகாதார வசதியோடு நிலம் இல்லாமலிருக்கிறது. ஆகையால், இந்தப் பாதுகாப்பு அவசியம். அதோடுகூட, ஸிடி டெனன்ட்ஸ் ப்ரொக்டெக்ஷன் ஆக்டிலே எப்படி வாங்கிக் கொள்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ, அதுபோல், குடியிருப்பு அனுபவித்து வரக்கூடியவர்களுக்கு கிரயம் கொடுத்து, அதற்கு ஏதாவது விகிதாசாரம் கொடுத்து வாங்கிக்கொள்வதற்கு அவர்களுக்கு உரிமை கொடுக்கவேண்டும். தாங்களாக வாங்க சக்தி இல்லாதவர்களாக இருந்தால், அரசாங்கம் நில ஆர்ஜிதச் சட்டப்படி அவர்களுக்கு வாங்கிப் பிரித்துக் கொடுத்து, இந்த தகராறு இறுதியாகத் தீர்க்கப்படவேண்டும். குத்தகை பாதுகாப்புச்

சட்டத்தைப்போல, இது தொடர்ந்து சிக்கல் ஏற்படுத்திக் கொண்டிருக்க முடியாது. இந்தச் சட்டத்திற்கு என்னுடைய முழு ஆதரவையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தில் குறை இருக்கிறது என்று ஒரு சாராரும், இந்தச் சட்டம் சரியாக நிறைவேறியிருக்கிறது என்று இன்னொரு சாராரும் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். இருந்தாலும், இந்தச் சட்டத்தைச் சரியாக அமுல் நடத்துவதற்கு இடைஞ்சல் பண்ணுமலிருந்தால் அதுவே போதுமானது என்று பொதுமக்களிடத்தில் நான் வேண்டிக் கேட்டுக் கொள்கின்றேன்.

குடியிருப்பு சம்பந்தப்பட்ட வரையில், இந்தப் பிரச்னை நிவாரணம் ஆகவேண்டுமென்றால், மனைக்கட்டையெல்லாம் 'அக்வையர்' பண்ணிக் கொடுக்க வேண்டும். ஒருவருக்கு இரண்டு, மூன்று செண்ட் நிலம் வீதம் குடியிருப்பதற்குக் கொடுப்பதற்காக, பொது மக்களுடைய பணத்தைச் செலவிட்டாலும் பரவாயில்லை. நிலத்தை 'அக்வையர்' பண்ணிக் கொடுக்கலாம். குடியிருப்பவர்களை அப்புறப்படுத்தவேண்டுமென்று எந்த அரசியல் கட்சிக்கும், சர்க்காருக்கும் எண்ணமாக இருக்க முடியாது. அவர்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுமென்று தான் சொல்வார்கள். குடியிருப்பு சம்பந்தப்பட்ட வரையில் ஒரு நிரந்தர விமோசனம் ஆகவேண்டுமென்றால், நில ஆர்ஜிதச் சட்டத்தைத் திருத்தக் கூடத் தேவையில்லை. "Land Acquisition Act, செக்ஷன் 17, ன் கீழ் நிலத்தை அவசரமாக அக்வையர் பண்ணி, ஒவ்வொருவருக்கும் சுமார் ஐந்து செண்டு வீதம்கூடப் பிரித்துக் கொடுத்துவிடலாம். ஏற்கனவே குடியிருந்த இடத்தைக் கொடுத்தால்தான், அவர்களுக்கு விமோசனமாக இருக்கும். இம்மாதிரி நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்தச் சட்டத்தை அமுல் நடத்தும் அதிகாரிகளைக் குறை கூற வேண்டாம். மற்றவர்கள் போய் இடைஞ்சல் செய்யாமலிருந்தால் மிராசுதார்களும் குடியானவர்களும் தங்களுக்குள்ளாகவே ஒத்துழைத்து வேண்டியதைச் செய்துகொள்வார்கள். அதுவே அவர்களுக்குச் செய்த உதவியாகும். குடியிருப்பிலிருந்து அப்புறப்படுத்தக்கூடாது என்று செய்துவிட்டால், மிராசுதார்களுக்கும் விவசாயத் தொழிலாளிகளுக்கும் இடையே நல்ல உறவு ஏற்பட்டுவிடும். அந்த வகையில் இந்தச் சட்டத்தை நல்ல முறையில் அமுல் நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தச் சட்டத்தைப் பொறுத்தவரை, கனம் அங்கத்தினர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கட்கு நம்பிக்கை ஏற்பட்டு, எல்லாம் சரியாக நடக்கும் என்று சொல்வது பற்றி நான் மகிழ்ச்சி அடைகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : உங்களுக்கு அப்படியாவது மகிழ்ச்சி கொடுத்தேனே, அதுபற்றி சந்தோஷம்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இது விஷயமாக நிரந்தரமாக என்ன நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பது பற்றி முன்கூட்டியே விவரமாகப் பேசினார், கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள்.

SRI M. KALYANASUNDARAM : அதிலே நாங்கள் இரண்டு பேரும் ஒற்றுமையாக இருக்கிறோம்.

THE HON. SRI M. A. MANICKAVELU : முன்கூட்டி இதுபற்றிப் பேசவேண்டிய அவசியம் இல்லை. அரசாங்கத்தின் நோக்கம், மனையை வாங்கியோ எப்படியோ பிரச்னையைத் தீர்க்கவேண்டும் என்பது. மனையிலே வசிப்பவர்களுக்கு வழி தேட வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம். அந்த அடிப்படையிலேதான் மசோதா கொண்டுவரப்படுகிறது. ஆகவே, அதற்கு வேண்டியதை அரசாங்கம் செய்யும் என்று சொல்லி என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

31st August 1961]

DEPUTY SPEAKER: The question is—

"That the Madras Occupants of Kudiyiruppu (Protection from Eviction) Bill, 1961 (L.A. Bill No. 27 of 1961), as amended, be passed."

The motion was put and carried and the Bill, as amended, was passed.

(3) THE MADRAS PANCHAYATS (EXTENSION TO TRANSFERRED TERRITORY) AND PANCHAYAT UNION COUNCILS (SPECIAL PROVISIONS FOR FIRST CONSTITUTION) AMENDMENT BILL, 1961 (L.A. BILL NO. 32 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM: Mr. Deputy Speaker, Sir, I beg to move— 12-00 noon.

'That the Madras Panchayats (Extension to Transferred Territory) and Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Amendment Bill, 1961 (L.A. Bill No. 32 of 1961), be taken into consideration.'

Hon. Members are aware that the Madras Panchayats Act, 1958, already provides for the application of the Act to the territory transferred from the former Travancore-Cochin State to the Madras State, that is, the Kanyakumari district and the Shencottah taluk of the Tirunelveli district and for the repeal of the provisions of the Travancore-Cochin Panchayats Act, 1950, as in force in the said territory.

The areas in the said transferred territory have already been delimited as Development Blocks for the purposes of the National Extension Service Scheme of Community Development. It is found necessary and desirable to make certain special provisions for the functioning of the existing panchayat without radical changes and to bring into existence not later than the 2nd day of October 1961 Panchayat Union Councils without following the elaborate procedure laid down in the Madras Panchayats Act, 1958.

It is proposed to continue the existing levy of cess on land in the said territory (until the Government otherwise direct by notification) *in lieu of* levy of local cess provided for in the Act and to exclude from the operation till then in the said territory the provisions of the Madras Panchayats Act, 1958, regarding the payment of Land Revenue Assignment and Local Cess Surcharge Matching Grant. It is also proposed to continue the existing system of management of elementary schools in the said territory and to exclude from operation the provisions of the Madras Panchayats Act, 1958, regarding the payment of Local Education Grant and maintenance of Panchayat Union (Education) Fund. It is further proposed to classify all the existing panchayats in the said territory as "town panchayats" except for purposes of payment of Village House Tax Matching Grant under Section 132 of the Madras Panchayats Act, 1958.

[Sri C. Subramaniam] [31st August 1961

It is also proposed to amend the Madras Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Act, 1960, so as to remove certain practical difficulties noticed in the working of the Act by providing that the presidents of panchayats and the chairmen of Township Committees *for the time being* in the Panchayat Union shall be members of Panchayat Union Councils concerned and taking power to appoint in specified cases, all the members of the Panchayats and the Township Committees in the Panchayat Union as members of the Panchayat Union Council.

The Bill was placed before the Kanyakumari District Development Council and the Tirunelveli District Development Council and the Councils have given general approval to the proposals contained in the Bill.

Therefore, I request the House to accept my motion.

DEPUTY SPEAKER: Motion moved—

'That the Madras Panchayats (Extension to Transferred Territory) and Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Amendment Bill, 1961 (L.A. Bill No. 32 of 1961) be taken into consideration.'

**Sri M. KALYANASUNDARAM:** இது எல்லோரும் வரவேற்க வேண்டியதொரு மசோதா. ஆனால் இதிலே இருக்கக்கூடிய குறைபாடுகள்—இந்த மசோதாவினால் வருவது அல்ல—பொதுச் சட்டத்திலேயே இருக்கக்கூடிய பலவீனங்கள். பின்னாலாவது நிரந்தரமாக அகற்றப்படவேண்டும். குறிப்பாக பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மெம்பர்களாக இருப்பார்கள் என்று இந்த தடவை செய்திருக்கிறோம். பஞ்சாயத்து போர்டிலே அந்தத் தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றி அங்கிருந்து அகற்றிவிட்டால் அவர் இங்கே மெம்பராக இருக்க முடியாது. பஞ்சாயத்து போர்டு தலைவராக இருக்கக்கூடியவர் பஞ்சாயத்து யூனியன் தலைவராகவும் ஆக முடியும். பஞ்சாயத்து யூனியன் தலைவராக இருக்கக்கூடியவர் மீது—பஞ்சாயியத்து போர்டு மெம்பர்கள் நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றிவிட்டால்கூட இங்கே பதவி போய்விடும். பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் மெம்பர்தான் நிறைவேற்ற வேண்டுமென்பதில்லை. இது ஒரு அனாமலி. சட்டத்திலேயே உள்ளது. நாங்கள் முன்பு சொன்னதுபோல பஞ்சாயத்து போர்டு தலைவர்கள், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் தலைவர்கள் பொதுமக்களாலேயே நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்று செய்துவிட்டால் அது மிகவும் சாலச் சிறந்ததாக இருக்கும். சட்டத்திலேயே இதுமாதிரியாக விளக்கம் கொடுத்திருக்கிற ஒரு பகுதியை எடுத்துவிடலாம். தேர்தல் இப்போது நடத்த முடியாது என்ற காரணத்தினால்தான் இடைக்கால ஏற்பாடாக பஞ்சாயத்து போர்டு தலைவர்கள் பஞ்சாயத்து கவுன்சில் மெம்பர்களாக இருப்பார்கள் என்று செய்தோம். இதையே பின்னால் நிரந்தரமாகவும் வைக்கக்கூடாது, பொதுவாக பின்னாலாவது இந்த நான்காவது பிரிவில் தெளிவுபடுத்தப்பட்டிருக்கிற பகுதியில் உள்ள அனாமலியை நீக்குவதற்குத் தக்க ஏற்பாடு செய்யவேண்டும், அதைப்பற்றி யோசிக்கவும் வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* Sri R. SRINIVASA IYER: Sir, this is not only a Bill extending the Panchayat Act to the Transferred Territory but also amending the Panchayat Union Councils (Special Provisions for

First Constitution) Act, 1960, in a very important way. After the passing of this Bill, it will be applicable not only to the Transferred Territory but also to other places in the State. The Government have taken powers to publish a notification that not only presidents but also vice-presidents and members of certain panchayats can become members of the panchayat union councils. I read through the Bill a number of times and I do not find any loop-hole and the powers taken by the Government in clause 6 of the Bill to extend new sections 3 and 4 of Madras Act No. 17 of 1960 are necessary and when once they are exercised, the panchayat union council comes into existence. The clause is well worded. But I would suggest that that provision should not be there permanently and I hope as provided for in the original Panchayat Act, the provision relating to the election of a representative of the panchayat in the panchayat union council from among the members of the panchayat will be brought into force as early as possible, after all the panchayat union councils have been constituted. With these words, I commend the Bill to the House.

SRI A. NESAMONY : Mr. Deputy Speaker, Sir, I welcome this Bill. The draft copy of the Bill was sent to the Development Council of the Kanyakumari district and it was discussed there and I find that all the recommendations of that Council have been embodied in this Bill. Sub-clauses (2) (*c*), (*d*) and (*e*) of clause 3 relate to the imposition of new taxes and the conduct of primary schools in that area. The constitution of the panchayats there varies from the constitution of the panchayats in other parts of the Madras State because the panchayats in the transferred territory were constituted under the Travancore-Cochin Act of 1950. Any specified area to be developed as a Panchayat will be constituted as a Panchayat. Here the population is taken to be the basis on which the Panchayat has to be constituted. If the population is to be taken into consideration for constituting Panchayats in the transferred territory, I am afraid, that the existing ward will have to be converted into Panchayat. It is so populous. It is only because of the difficulty experience by the authorities concerned in the constitution of new panchayats, that these temporary and transitory provisions have been recommended. Under the existing circumstances it is the only way to deal with the situation. So I welcome this Bill.

In the matter of levy of irrigation cess and the application of the Irrigation Fund, several provisions relating to these matters, have been held in abeyance. All the primary schools are under the management of our Government. How could the management be transferred from Government to Panchayat Union Councils. What should be the nature and extent of financial support that could be given to these Panchayat Union Councils to continue these centres, who ought to be the supervising agency when the Panchayat Unions take over elementary schools—that is a

problem that is confronting the Government. I believe that Government will find a solution so that these provisions may be introduced in the transferred territory in consonance with other areas of Madras.

The Government has to undertake a big building programme in the matter of elementary education. When compulsory free primary education was introduced all over the area, temporary sheds were put up to house those who were undergoing primary education. Most of the sheds have now come down and the responsibility of re-building them would devolve on the Panchayat Union Council. The Panchayat Union Council cannot have the wherewithal to carry on this extensive building programme. Government have now allotted a few lakhs of rupees for reconstructing some of these buildings. It has to be done only by a phased programme extending for a few years. If that programme has to be gone through, Government will have to find ways and means by which the Panchayat Unions would be helped to reconstruct the schools and reconstruct useful buildings.

There is yet another problem in the area. It is the problem of the leased schools of the London Missionary Society or Corporation. Government have now ordered that 108 school buildings that have been leased to Government would be handed over to the Corporation. A phased programme has been submitted to the Director of Public Instruction and I am sorry to say that no reply has yet been received from the Director of Public Instruction on this matter. It is up to the Government to nominate a Special Officer to look into each and every school and suggest improvements for re-building the school or for reconstruction a school closeby. The Corporation by itself would be prepared to help the Government in the matter of reconstruction of these schools or supply a plot of land free of cost because the Mission is as much interested in the education of small children in the area as Government itself. So, I submit that this phased programme may be taken up by Government and an officer appointed to negotiate with the Mission as to how best the schools will be reconstructed. That would serve as a help for the Mission to continue the schools in the area. This phased programme might be arranged in such a way that it might be completed by the beginning of next school-year so that the most urgently needed schools may be handed over by Government to the Management. With these words, I commend the Bill for the acceptance of the House.

Finally I want to make an observation with regard to the notification that has been issued by Government. In sub-clauses (*c*) and (*e*) of clause 3, that is being referred to. The Panchayat Act is being amended by the present Bill that is being introduced in this House. The Sections that are now held in abeyance might be allowed to come into force by a notification of Government. Whether it would be proper for Government to bring into force

the Section now held in abeyance, by a nootification, is a matter of concern. I submit that the power of legislation that is vested in the Legislature seems to be arrogated by Government by issue of notification. An amendment of the Act should be done only by the Legislature and not by notification of Government.

**THF HON. SRI C. SUBRAMANIAM** : பொதுவாக இந்த மசோதாவிற்கு வரவேற்பு இருக்கிறது. கன்யாகுமாரி பகுதியில் இந்த பஞ்சாயத்து ஆக்டையும், பஞ்சாயத்து யூனியன்ஸ்ம் ஏற்படுத்த அவசியம் இருப்பதால் இது வரவேற்கப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் நேசமணி அவர்கள் கல்வித் துறையைப்பற்றி பல விஷயங்களைச் சொன்னார்கள். அது இந்த மசோதாவிற்குப் புறம்பானது, ஆகவே புறம்பானவைகளுக்கு பதில் சொல்லி சரி செய்ய நான் விரும்பவில்லை. ஒரு சட்ட நுணுக்கத்தை இங்கு கிளப்பினார்கள். நோட்டிபிக்கேஷன் மூலம் இந்த 'அபயன்ஸில்' இருப்பதை மறுபடியும் திருப்பிக் கொண்டு வரலாமா என்றால் அதை சட்டத்தில் கொண்டு வரும்போது இருக்கக்கூடிய சட்டத்தை சம்பந்தப்பட்டதை, ஒரு காலவரையறை வரை அமுல் நடத்த வேண்டாம், அது எந்தக் காலம் வரை என்பதை நோட்டிபிக்கேஷன் மூலம் நிர்ணயிக்கலாம் என்று சொல்லும்போது அதில் தவறு இருப்பதாகத் தெரியவில்லை. பஞ்சாயத்து பிரசிடென்ஸ்தான் பஞ்சாயத்து யூனியனில் மெம்பராக இருப்பதின் சங்கடம்பற்றிச் சொன்னார்கள். முதலில் அது தாற்காலிகமாக இருக்கக்கூடியதே. இம்மாதிரிக் கஷ்டங்கள் வராமல் பார்த்துக் கொள்ள கட்சிப் பிரதி கட்சிகள் அதிகமாக இல்லாமல் ஒற்றுமையாக நடத்துவதற்குள்ள சூழ்நிலையை ஏற்படுத்த வேண்டும். அப்படி ஏற்படுத்தினால் இதுபோன்ற சட்டங்களை சிக்கல் இன்றி நடத்தமுடியும். அதற்கு நாம் உழைக்க வேண்டும். ஆகவே இந்த மசோதாவை எற்றுக் கொள்ளுமாறு வேண்டிக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

" That the Madras Panchayats (Extension to Transferred Territory) and Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Amendment Bill, 1961 (L.A. Bill No. 32 of 1961) be taken into consideration."

**The motion was put and carried and the Bill was taken into consideration.**

Clauses 2 to 7 were put and carried.

Schedules I and II were put and carried.

**Clause and the Preamble were put and carried.**

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" That the Madras Panchayats (Extension to Transferred Territory) and Panchayat Union Councils (Special Provisions for First Constitution) Amendment Bill, 1961 (L.A. Bill No. 32 of 1961) be passed."

DEPUTY SPEAKER : The question is—

" That the Madras Panchayat (Extension to Transferred Territory) and Panchayat Union Council (Special Provisions for First Constitution) Amendment Bill, 1961 (L.A. Bill No. 32 of 1961) be pased."

**The motion was put and carried and the Bill was passed.**

[31st August 1961

(4) THE MADRAS DISTRICT DEVELOPMENT COUNCILS AND PANCHAYATS (EXTENSION TO ADDED TERRITORY) BILL, 1961) L.A. BILL NO. 33 OF 1961.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I beg to move—

'That the Madras District Development Councils and Panchayats (Extension to Added Territory) Bill, 1961 (L.A. Bill No. 33 of 1961) be taken into consideration.'

The Bill which is before the House is simple and non-controversial. It is proposed to extend the provisions of the Madras District Development Councils Act, 1958, to the areas added to the Madras State by the Madras and Andhra Pradesh (Alteration of Boundaries) Act, 1959, so that the portions of the territory added to the Chingleput and the North Arcot districts might respectively form parts of the Chingleput Development district and the North Vellore Development district.

It is also proposed to extend the provision of the Madras Panchayats Act, 1958, to the said territory. The areas in the said added territory have already been delimited as Development Blocks for the purposes of the National Extension Service Scheme of Community Development. It is proposed to declare the said Development Blocks as Panchayat Development Blocks and Panchayat Unions under the Madras Panchayats Act, 1958, and to contribute Panchayat Union Councils for each of the said Panchayat Unions with effect from the appointed day which will be 2nd October 1961, the date from which the third batch of Panchayat Union Councils will be inaugurated in the rest of the State. It is also proposed to include in the existing Panchayat Unions of the State certain villages in the said added territory which are contiguous to the said Panchayat Unions.

The draft Bill which was placed before the Chingleput and North Vellore District Development Councils has been generally approved by the Councils.

Request the House to accept my motion.

DEPUTY SPEAKER : Motion moved—

'That the Madras District Development Councils and Panchayats (Extension to Added Territory) Bill, 1961 (L.A. Bill No. 33 of 1961) be taken into consideration.'

SRI K. VINAYAKAM : Mr. Deputy Speaker, இப்போது சபை முன் வந்திருக்கிற மசோதா **non-controversial**—ஆனது என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். இதில் என்னுடைய கான்டிரவர்சி என்னவென்றால் இந்த மசோதாவை இத்தனை நாட்களுக்குப் பின்னால் தாமதித்துக் கொண்டுவந்திருக்க வேண்டியதில்லை. கழிந்த அக்டோபர் மாதம் இரண்டாம் தேதியே அமல் செய்யப்பட்டிருக்கலாம். காரணம், இந்தப் பகுதிகள் எல்லாம் 1953-வது ஆண்டு அக்டோபர் மாதம் மாறிப்போன பிரதேசம். இங்கிருந்து மாறின பின்னால் அங்கு பல சட்டங்கள் புதிதாகக் கொண்டு வந்தார்கள். இதனால் பல தொல்லைகள் ஏற்பட்டன. அவற்றையெல்லாம் அரசாங்கத்திற்கு அவ்வப் போது எடுத்துக் கூறியிருக்கிறேன்.

